# 5. மருதம் – விளைநிலம்

நெற்பயிர் விளையாநின்ற வயல்நிலத்தையும் வயல் சூழ்ந்த இடத்தையும் 'மருதம்' என்று தமிழ்நூலார் பண்டைக் காலந்தொட்டு வழங்கி வருகின்றனர். பழைய காலத்தில் நெற் பயிரிடுதற்கேற்றவைகளாகத் திருத்தப்பட்ட நிலங்கள், மருத மரங்களின் அருகேயிருந்தமையாற்போலும், அவற்றிற்கு மருத நிலம் என அவர் பெயர் அமைத்தனர். வயல்நிலத்தைப் 'பண்ணை', 'பணை', 'செய்', 'செறு', 'கழனி', 'பழனம்', 'விளையுள்', 'புலம்', 'வரப்புள்' என்னும் பல சொற்களால் தமிழ் மக்கள் வழங்கி வருகின்றனர்.

பழைய நாட்களில் மாந்தரின் தொகை பெருகப் பெருக, அவர்களுக்கு வேண்டிய அளவு உணவுப் பண்டங்கள் மலை களிலும், கடல்களிலும், காடுகளிலும் கிடைப்பது அரிதாயிற்று. மலைகளிலும், காடுகளிலும் உள்ள கனிகள், வித்துக்கள், கிழங்குகளையும் மான், மரை, கடம்பை, ஆடு, மாடு, பன்றி முதலிய விலங்குகளையும் கடல்களிலுள்ள மீன்களையும் தின்று வந்த மிகப் பழைய முன்னோர்கள், தமது தொகை பெருகப் பெருக அவை போதாமை கண்டு, ஆடு மாடுகளை மிகுதியாக வளர்த்து அவற்றின் பயன்களான நெய், பால், தயிர் முதலியவை களையும் காடுகளில் ஆங்காங்கு இயற்கையாக வளர்ந்து கிடந்த அவரை, துவரை, மொச்சை, காராமணி, உழுந்து, பயறு, கடலை, எள்ளு முதலான பண்டங்களையும் உட்கொண்டு உயிர் வாழ்ந்து வந்தார்கள். காலஞ் செல்லச் செல்ல அவர்களின் தொகை பின்னும் பின்னும் பெருகலானமையின், இயற்கையில் கிடைத்த இத்தனை உணவுப் பண்டங்களும் அவர்கட்குப் போதா ஆயின. இதற்கென் செய்வது என்று, அவர்களுள் அறிவால் மிக்க சிலர் எண்ணிப் பார்க்கப் பார்க்க, இயற்கையாக வளரும் கூலங்களின் வித்துக்களை மட்டும் எடுத்து, வேறு மரஞ்செடிகொடிகள் இல்லாத வெளி நிலங்களைக் கீறி

அவற்றுள் விதைத்தால், அவை மிகுதியான விளைச்சலைத் தருமெனக் கண்டறிந்தார்கள். அறிந்தபின் அறிஞர்களும் அவரது ஏவல்வழி நின்றவர்களும் வெட்ட வெளியாகக்கிடந்த நிலங்களைக் கோல்களாலும், குந்தாலிகளாலும் கிளறிக் கொத்தி அவற்றின்கண் அவ்விதைகளை இட, அவை வேண்டிய அளவு வெயிலும் மழையும் பெற்று, வேறு மரஞ்செடி கொடிகளின் இடைஞ்சல் இல்லாமையின், ஒன்று நூறாகப் பயன்தரலாயின.

இங்ஙனம் முதன்முதல் செயற்கைப் பயிர் செய்வதற்கு வெளி நிலங்களே பயன்பட்டமையின், அவை 'வயல்', 'புலம்' என்று பெயர் பெறலாயின. வயல் என்னும் சொல்லுக்கு முதற்பொருள் வெளியென்பது ஆகும். புலம் என்னும் சொல்லும் எவை தம்மாலும் மறைக்கப்படாமல் கண் ணுக்குப் புலப்பட்டுக் கிடக்கும் வெளியிடத்தையே உணர்த் தும். மேலும், இயற்கையில் வறிதாய்க் கிடந்த வெளிநிலம் அறிவர் சிலரால் முதன்முதல் கிண்டிக் கிளறிப் பயிர் செய்வதற்கு ஏற்றபடியாகச் செய்யப்பட்டமையின் பின்னர் அது 'செய்' என்றும், பண்ணப்பட்டமையின் 'பண்ணை', 'பணை' என்றும் செறப்பட்டமையின் அதாவது கீறப்பட்டமை யின் 'செறு' என்றும் வழங்கப்படலாயிற்று.

இவ்வாறு முதலில் தொடங்கிய பயிர்த்தொழிலைச் செய்யச் செய்ய, மேலும்மேலும் அதனைத் திறமாகச் செய்யும் வழி வகைகளை நம் முன்னோர்கள் கண்டறிந்தார்கள். வல்லென்று கெட்டியாயிருக்கும் நிலத்தில் மென்பதத்தவான நெல்லும், ஏனை மணிகளும் வேர் ஊன்ற மாட்டாமல் பட்டுப் போதல் கண்டு வன்பாலான நிலத்தை மென்பாலாக்கும் முறை கண்டு கொண்டார்கள். நிலத்தைக் கிளறி அதற்குத் தண்ணீர் பாய்ச்சினால் மண்ணும் தண்ணீரும் கலந்து அது மென்பதப் படுதல் அறிந்தனர். இங்ஙனம் கிளறுதலாலும் தண்ணீர் பாய்ச்சுதலாலும் இறுகிய மண் கழன்று நிலம் மென் பதம் அடைதலின், அங்ஙனம் கழன்ற வயல்நிலம் 'கழனி' எனப்பட்டது.

அதன்மேல், பயன்படுத்தப்பட்ட அக்கழனியில் வித்திய நெல் ஒன்று பல்லாயிரமாய் பயன் தந்ததாகலின் பின்னர் அது 'பழனம்', 'விளையுள்' எனப் பெயர் பெறலாயிற்று. பயன், பழம்,

பழன், விளைவு முதலியன எல்லாம் ஒரே பொருளைத் தரும் சொற்களாகும்.

அங்ஙனம் விளைந்த நிலம் முதலில் பலர்க்கும் பொது வாயிருந்ததனால், அதன் விளைவை அவரெல்லாரும் தத்தமக்கு வேண்டிய அளவு பங்கிட்டுக் கொண்டு வைத்து வாழ்ந்தார்கள். பிறகு நாள் செல்லச் செல்ல, நன்றாக உழைத்துப் பாடுபடுபவர்களும், பாடுபடாமல் சோம்ப லுற்று இருப்பவர்களும் விளைந்த பொருள்களைத் தாம்தாம் வேண்டும் மட்டும் எடுத்துக் கொள்ள விடுதல் முறை யாகாதென்று உணர்ந்தனர். உணர்ந்து அவரவர் எவ்வளவு பாடுபடக் கூடுமோ அவ்வளவு பாட்டுக்குத்தக்க நிலத்தை அளந்து வரம்பு கட்டி அவரவர்க்குப் பங்கிட்டுக் கொடுத் தனர். முதலில் பலர்க்குப் பொதுவாய்க் கிடந்த நிலப்பரப்பு பின்பு ஒவ்வொருவர்க்கோ அல்லது ஒவ்வொரு குடியினர்க்கோ உரியவாம் பல பகுதிகளாகப் பங்கிடப்பட்டு இடையிடையே வரம்பு உயர்த்தப்பட்டமையின், அவ்வாறு வரம்புக்கு உள்ளடங்கிய வயல்கள் ‘வரப்புள்’ என்று வழங்கப்படுவ வாயின. ‘வரம்பு’ என்பது வரப்பு என வலித்தது. இவ்வாறாகத் தமிழில் வயல் நிலத்திற்கு வழங்கும் பல சொற்களையும் ஆராயவே, பண்டைக் காலத்திருந்த தமிழ் முதுமக்கள் முதன்முதல் பயிர்த்தொழில் எவ்வாறு செய்ய அறிந்து, அதனை எவ்வாறு செய்து, எவ்வாறு பயன்படுத்தி இன்று காறும் வாழ்ந்து வருகின்றனர் என்னும் வரலாறு நன்கு விளங்குதல் கண்டுகொள்க.

இனித் தொன்றுதொட்டுப் பயிர்த்தொழிலைப் பெருக்கி வாழும் உழவு வாழ்க்கை, தமிழ் மக்களிடம் மிகுந்து காணப் படுதல் போல், உலகத்திலுள்ள வேறு எந்த மக்களிடத்தும் மிகுந்து காணப்படவில்லை. மற்றை மாந்தர்கள் தத்தம் நாடுகளில் சிற்சில பகுதிகளிலேதாம் உழவுத் தொழிலை நடத்தி வரக் காண்கின்றோம். மற்றும் தமிழ்மக்களோ தாம் உறையும் இத்தென்னாடு முழுதும் நெற்பயிரும், பிறபயிரும் விளைத்து இனிது வாழ்ந்து வருகின்றனர். இத்தமிழ்நாட்டின் வடஎல்லையாகிய திருவேங்கடமலையிலிருந்து, தென்கோடி யாகிய குமரிமுனை வரையிலும் கீழ்கரை, மேல்கரை

வரையிலும் எங்கே பார்த்தாலும் பச்சைப் பசேலென விளங்கும் நெல் வயல்களே நிறைந்து காணப்படுகின்றன. இதற்குக் காரணம் என்னென்றால், தமிழ் நாட்டின்கண் ஆறுகளும், குளங்களும், ஏரிகளும், கால்வாய்களும் மிகுந் திருத்தலே ஆகும்; வேறு நாடுகளிலோ அவை அங்ஙனம் மிகுந்திருக்கவில்லை. வடபெண்ணை, பாலாறு, தென் பெண்ணை, காவிரி, வைகை, பொருநை, நெய்யாறு முதலியன நீர்நிரம்பி ஓடுதலும், இவற்றால் நீர் ததும்பிப் பொலியுங் குளங்களும் தாமரைவாவிகளும் பெரிய பெரிய ஏரிகளும், அவற்றிலுள்ள நீரைக் கொண்டு சென்று கோடிக் கணக்கான வயல்களை ஊட்டும் கால்வாய்களும் இத்தென்னாட்டின்கண் அடுத்தடுத்துக் காணப்படுதல் போல வேறெங்கும் காணப் படுதல் இல்லை. சோழ நாட்டிற்கு ஓர் உயிராய் நின்று நிலவும் காவிரியாறு, நெடுந் தொலைவிலுள்ள மேற்கரை மலை களிலிருந்து திரட்டிக் கொணரும் வண்டல்கள் இந்நாட்டின் வயல்களிலும் படுகைகளிலும் படிந்து நிலத்தை மிகவும் செழுமையுறச் செய்கின்றன. பாண்டிநாட்டில் ஓடும் வைகை, பொருநை முதலான ஆறுகளும், காவிரியாற்றிற்கு அடுத்த படியாக அந்நாட்டின் மருதநிலங்களை வளப்படுத்தும் தன்மையனவாகவே இருக்கின்றன. இங்ஙனமாக இத் தென்னாட்டின் இயற்கை அமைப்புப் பயிர்த் தொழிலுக்குப் பெரிதும் ஏற்ற பல நலங்களும் பொருந்தி இருத்தலால், எத்தனையோ ஆயிர ஆண்டுகளாக இதன்கண் உயிர்வாழும் தமிழ்மக்கள் அத்தொழிலைச் செவ்வையாக நடத்திக்கொண்டு இனிது காலம் கழித்து வருகின்றனர்.

இன்னும், இத்தென்நாட்டின்கண் உள்ள மருத நிலங் களில் நெற்பயிர் மட்டுமே அன்றித் தென்னஞ் சோலை களும், மாந்தோப்புகளும், கமுகந் தோட்டம் - வாழைத் தோட்டங்களும், எலுமிச்சை, நார்த்தை, பலா, கரும்பு முதலியன செழித்திருக்கும் தோட்டக் கால்களும், இஞ்சி, மஞ்சள், மிளகாய், சேம்பு, கருனை முதலியன வளர்ந்திருக்கும் கொல்லைகளும், கண்ணையும், கருத்தையும் கவரும் வனப்பும், பயனும் மிக்கனவாய் ஆங்காங்கு அடர்ந்து காணப்படுகின்றன.

உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத இத்தனை உணவுப் பண்டங்களும் எளிதிலே விளைத்துக் கொள்ளுதற்கேற்ற வசதிகள் இயற்கையே அமையப்பெற்ற இத்தென்னாட்ட வர்கள், தமக்குச் சிறப்பாக உரிய உழவுத் தொழிலை மேன்மேற் செவ்வையாகச் செய்து வருவார்களானால், அவர்கள் ஏனைநாட்டு மக்களைச் சார்ந்து பிழைக்க வேண்டியதிராது. மற்றைத் தொழில்களைச் செய்யும் மற்றை நாட்டவர்களே இத்தென்னாட்டவர் உதவியை எதிர்பார்த்துப் பிழைக்க வேண்டியவராவர்.

"சுழன்றும் ஏர்ப்பின்ன துலகம் அதனால்
உழந்தும் உழவே தலை." (திருக்குறள் 1031)

## 6. நெய்தல்-கடல்

பழைய தமிழ் நூல்களில் கடலையும் கடல் சார்ந்த நிலத்தையும் 'நெய்தல்' என்று அறிவுடையோர் வழங்கி யிருக்கின்றனர். கடல் என்னும் சொல் கட்பார்வையினைக் கடந்து நிற்பது என்னும் பொருளைத் தரும். கடலினது எல்லை அதனை நோக்குவாரது கண்ணுக்குப் புலனாகாமையின், அஃது அங்ஙனம் பெயர் பெறலாயிற்று.

இனிக், கடலானது எந்நேரமும் பேர் இரைச்சல் இடுவது பற்றி 'ஆர்கலி', 'நரலை', 'குரலை', 'அழுவம்' என்றும், பரந்திருப்பது பற்றிப் 'பரவை' என்றும், ஆழ்ந்திருப்பது பற்றி 'ஆழி' என்றும், உப்புநீர் உடைமை பற்றி 'அளக்கர்' 'பௌவம்' 'உவரி' என்றும், மழை முகிலை உண்டாக்குதல் பற்றிக் 'கார்கோள்' என்றும், மழைநீர், ஆற்றுநீர், ஊற்றுநீர் மூன்றுக்கும் காரணமாதல் பற்றி 'முந்நீர்' என்றும் பல சொற்களால் வழங்கப்படுகின்றது.

கடற்காட்சியினைக் காணல்வேண்டினால் சென்னை, நாகை, திருச்செந்தூர், தென்குமரி முதலான பட்டினங்களில் கடற்கரையோரங்களில் சென்றிருந்து காணல் வேண்டும். விடியற்காலையில் ஞாயிறு கிழக்கே தளதளவென்று எழும்போது உண்டாகும் கடலின் தோற்றம் பெரிதும் உள்ளத்தைக் கவரும் தன்மையதாய்ப் பொலிகின்றது. பகலவன் எழுவதற்கு முன் நீலநிறமாயிருந்த ஆர்கலியின் நீர்ப்பரப்பு அவனது ஒளிபாய்ந்த அளவில் பச்சென்ற நிறமுடையதாக மாறி மிளிர்கின்றது; ஞாயிற்றின் கதிர்கள் அதன்மேல் துள்ளுவது போல் காணப்படுகின்றன. கடலின் பரப்பும் கீழ்பால் வானும் ஒரு பெருவிளக்கமுடையதாய்த் திகழ, அவை இரண்டன் ஓரங்களும் பொருந்தும் இடத்தே கதிரவன் நெருப்புத் திரளைப் போல் தோன்றும் காட்சி இவ்வுலகமே

தன்வாயைத் திறந்து தன் அகத்திருந்த ஒரு பெருந் தீக்கட்டி யினைக் கக்குதல்போல் இருக்கின்றது.

அப்போது கடல்நீர் குன்றின் குவடென உயர்ந்து, பிறகு சுருண்டு கீழ்விழுங்கால் வெள்ளை வெளேல் என்ற அலை களை உண்டாக்க, அவ்வலைகள் ஓவென இரைந்து வருதலைப் பார்க்கும்போது, அவை, போர்முனையில் வரிசை வரிசையாக நிறுத்தப்பட்ட வெள்ளைக் குதிரைகள் தம்முடைய கழுத்தி லிருந்து தொங்கும் வெள்ளிய கூந்தல் அலைய அலையக் கனைப்பொலியுடன் பாய்ந்து வருவது போல் தோன்றுகின்றன.

அந்நேரத்தே பாய்கட்டிக் கப்பல்களும் நீராவிக் கப்பல் களும் கரைகாணப்படாத அப்பரவையினூடு தன்னந்தனியே செல்லுதலைக் காண்கையில், நமதுள்ளத்தே ஒரு வியப்பும் அச்சமும் உண்டாகின்றன. எல்லையும் ஆழமும் தெரியாத இப்பெருநீரிலே இம் மரக்கலங்கள் எங்ஙனம் எல்லைகண்டு செல்கின்றன! இவைதம்மை எல்லைகண்டு செலுத்தி அப்பா லுள்ள நாடு நகரங்களுக்குக் கொண்டுபோய் சேர்க்கும் மீகாமனுடைய கருத்தும் கூர்ந்த அறிவும் உணர்ந்து பார்க்கும் கால் பெரு வியப்பினை விளைவிக்கின்றன அல்லவோ! ஆழமும் அறியாமல், காற்றுக்கும், மழைக்கும் உள்ளாகிக், கடவுளை யன்றி வேறேதொரு துணையும் இல்லாமல் செல்லும் அக்கப்பல்களைக் காணும்போது அச்சமும் உண்டாகின்றது. கரையிலிருந்து நோக்குவார்க்கே இத்தகைய வியப்பும் அச்சமும் தோன்றுமானால், நடுக்கடலிலே கப்பலிலிருந்து சுற்றி ஒரே வெள்ளக் காடாயிருத்தலை நோக்குவார்க்கு இன்னும் எத்தனை வியப்பும், திகிலும் உண்டாகா நிற்கும்.

ஒருகால் யாம் தூத்துக்குடியிலிருந்து கப்பலேறிக் கொழும்பு மாநகர்க்குச் செல்லா நிற்கையில் இத்தகைய நிகழ்ச்சியால் எமது நெஞ்சம் அசைவுண்டது. யாம் கப்ப லேறிய மாலை கப்பல் துறைமுகத்தைவிட்டுப் புறப்பட்டுப் போய்க்கொண்டிருக்கையில் நள்ளிரவில் எழுந்து கடலை யும், வானத்தையும் நோக்கினோம். வானில் வெண்திங்கள் நிலவொளி விரித்து வழங்கியது. அவ்வொளி பட்டுக் கட் புலனுக்கு விளங்கா நின்ற கடலிடமெல்லாம் தூய வெண் பட்டாடை விரிக்கப்பட்டாற் போல் வெளேலென ஒளிர்ந்தது. ஆ! அக்காட்சியின் வனப்பை என்னென்போம்! அதனைக்

கண்டு வியந்த வண்ணமாய்ச் சுற்றிலும் பார்வையைச் செலுத்தி எட்டி நோக்கத் தொலைவிலுள்ள பௌவத்தின் பரப்பு வரவர மங்கலாய் இருளோ எனத் தோன்றியது! அருகில் காணப்படும் நிலவொளிப் பரப்பிலிருந்து, தொலைவில் தோன்றும் இருள்மிகு பரப்பினுட் கப்பல் தனியே விரைந்து செல்லும் செலவினைக் கண்டு எமதுள்ளத்தே முன்னறியாத ஒரு நடுக்கம் தோன்றியது!

யாம் ஏறியிருந்த அக்கப்பலின் தனிமையையும், அதனுள்ளிருக்கும் எமது தனிமையையும் நினைத்து, அந்நேரத்தில் எல்லாம் வல்ல ஆண்டவன் துணையை அன்றி வேறேதும் இல்லாமை கண்டு எமது நெஞ்சம் நெக்குருகியது! கடவுள் நம்பிக்கை இல்லாத அறிஞர் எவரேனும் கப்பலேறிச் செல்வராயின், அவர்க்குக் கடவுள் நம்பிக்கை தானே உண்டாகுமென அப்போது நன்கு உணர்ந்தோம். ஆராய்ச்சியும் அறிவும் இல்லாமல் விலங்கினங்களைப் போல் கப்பலேறிக் கடல் கடப்பாரைப் பற்றி இங்கே நினைக்க வேண்டுவதில்லை. ஆராய்ச்சியும் அறிவும் உணர்வெழுச்சியும் உடையாரே மரக்கலச் செலவால் அறிவும் இன்பமும் கடவுள் நம்பிக்கையும் எய்துவர் என்றுணர்தல் வேண்டும்.

இன்னும், கடலுக்கு அருகிலுள்ள ஓர் உயர்ந்த மலைமேலேறிக் கடற்பரப்பினையும், அதனையடுத்த துறைமுகப் பட்டினத்தையும் நோக்குவார்க்கு, இறைவன் வகுத்த இயற்கைக் கடலமைப்பும், மக்கள் வகுத்த ஒரு பட்டினத் துறைமுகச் செயற்கை அமைப்பும் ஒருங்கு இணைந்து, ஒருபெரும் புதிய காட்சியினைப் பயந்து, அவரது உள்ளத்தினை இன்னும் ஆழ்ந்த நினைவிலே புகுத்தா நிற்கும். இறைவன் வகுத்த இயற்கையமைப்புகள் எங்ஙனம் அழகும் பயனும் வாய்ந்து திகழ்கின்றனவோ, அங்ஙனமே மக்கள் எழுப்பிய உயர்ந்த மாடமாளிகைகளும் தொழில் நிலையங்களும் அவை தம்முள் பலவற்றின் கொடுமுடிகளும் காட்சிக்கினியவாய்ப் பயன்சிறந்து திகழா நிற்கின்றன. இதனை எண்ணிப் பார்க்கையில் மக்களின் அறிவும், முயற்சியும் கடவுளின் அறிவு முயற்சிக்கு ஒரு புடை ஒத்த தெய்வத்தன்மை வாய்ந்தனவாகவே தோன்றுகின்றன. இயற்கைப் பொருளியக்கங்கள் ஒரோவொருகால் மக்களின் அறிவு முயற்சியைச் சீர்குலைத்துச் சிதைப்பனவாய்

இருப்பினும், அவற்றிற்கு அஞ்சித் தமது முயற்சியைக் கை சோரவிட்டு அறிவு குன்றிப் போகாமல், அவர்கள் மேன்மேல் அறிவு மிகப் பெற்று அதனால் அரியபெரிய முயற்சிகள் செய்து அவற்றொடு போராடி வெற்றி கொண்டு நிற்கும் பேராண்மை, மலைமேலிருந்து இவ்விரு வேறு அமைப்புகளையும் நோக்கு தலால் நம் கட்புலனெதிரே நன்கு விளங்கா நிற்கின்றது. அங்கும் இங்குமாய் அலையும் கடலின் எதிரே உயர்நிலை மாடங்களும் தொழில் நிலையங்களும் அலைவின்றி வீறி நிற்கும் காட்சி அறிவுடை மக்களின் அசையா உள்ளப் பான்மையினை அறிவிக்கின்றதன்றோ?

இனிக், கடலின் பரப்பு, இந்நிலத்தின் பரப்பைவிட மும்மடங்கு பெரியதாயிருக்கின்றது. ஆனதனால்தான் தமிழ் மக்கள் அதனைப் ‘பரவை’ என்று வழங்கி வருகின்றனர். நிலத்தைவிட நீரின் அளவு இத்துணை மிகுதியாய் இருக்க வேண்டுவது ஏன் என்று ஆராய்ந்து பார்த்தால், நிலம் வன் பொருளாயும், நீர் மென் பொருளாயும் இருத்தலினாலும், நிலத்தின்கண் பயிராகும் பயிர் பச்சைகள் முதல் சிற் றுயிர்கள் பறவைகள் விலங்குகள் மக்கள் ஈறான எண்ணிறந்த கோடி உயிர்களின் உயிர் வாழ்க்கைக்கும் கடலின்கண் உயிர் வாழும் அளவிறந்த கோடி உயிர்களின் உயிர் வாழ்க்கைக்கு மெல்லாம் நீரின் உதவியே இன்றியமையாததாய் இருத்த லினாலும், நிலமானது தன்னளவில் மாறாமல் நிற்க நீரானது நிலத்தினுள் சுவறுவதோடு மீண்டும் மழையாய் இறங்குவதற்கு ஆவியாக மாறி வானின்கண் முகிலாய் உலவவேண்டி யிருத்தலினாலும், நிலத்தை வளமுடையதாக்கி உயிர்களைப் பல்கச் செய்யும் நீர், நிலத்தினும் மிகுந்த அளவினதாக இறைவனால் அமைத்து வைக்கப்பட்டதென்றும் உணர்தல் வேண்டும்.

இனிக், கடலைவிட ஆழத்தின் மிக்கதொரு நீர்நிலை எங்கும் இல்லாமையால், ‘ஆழி’ என்னும் பெயர் கடலுக்குரிய தொன்றாகப் பண்டுதொட்டுத் தமிழில் வழங்கி வருகின்றது. நமது இவ்விந்திய நாட்டை அடுத்திருக்கும் ‘இந்தியமாக்கடல்’ பெரும்பான்மையான இடங்களில் பன்னீராயிர அடி - சிறிதேறக்குறைய இரண்டேகால் மைல் ஆழமுடையதாக இருக்கின்றது; மற்றும் சிற்சில இடங்களில் அஃது இரண்டே

கால் மைலுக்கு மேல் நாலே கால் மைல் வரையில் ஆழமுடையதாக ஆராய்ந்தறியப்பட்டிருக்கின்றது.

சாவகத் தீவுக்குச் (Java) தென்னண்டையிலுள்ள கடற் பகுதியோ நாலேகால் மைல் ஆழமுடைய தொன்றாக ஆராய்ச்சி வல்ல ஆசிரியரால் அளந்து காணப்பட்டிருக் கின்றது. இனி, இவ்விந்திய மாக்கடலினும் ஆழமுடையது 'ஆட்டுலாந்திகு' மாக்கடலேயாம்; தென் அமெரிக்காவுக்கும் வட அமெரிக்காவுக்கும் இடையிலேயுள்ள மேல் இந்தியத் தீவுகளின் வடக்கே நிற்கும் இம்மாக்கடற் பகுதியின் ஆழம் சிறிதேறக்குறைய நாலேகால் மைல் ஆகும். இனி, இப்பெருங் கடலினும் ஆழம் வாய்ந்தது 'அமைவுப் பெருங்கடலே' ஆகும். இஃது அமெரிக்கப் பெருந்தேயத்திற்கும், ஆசியா ஆஸ்திரேலியப் பெருந் தேயங்கட்கும் இடையிலே நிற்கின்றது. இது சிற்சில இடங்களில் ஐந்து மைல் ஆறு மைல் ஆழமும் வாய்ந்த தொன்றாக அளந்தறியப்பட்டுள்ளது. இன்னும் இஃது எவ்வளவு மிகுதியான ஆழமுடையது என்பதனை முற்றும் அளந்து காண்டல் இயலாததாய் இருக்கின்றதென ஆராய்ச்சி வல்ல ஆசிரியர் நுவல்கின்றனர். எனவே, இந்நிலவுலகத்தைச் சூழ்ந்த பேராழியின் ஆழம் ஆறுமைல் வரையில் செல்வ தென்பது நன்கறியப்பட்டிருத்தலால், அக்காரணம் பற்றி அதனை 'ஆழி'யென வழங்குவது பெரிதும் பொருத்த முடையதாதல் காண்க.

இனிக், கடலின்கண் உள்ள நீர் உப்பாயிருத்தல் ஏன் என்றறிய அறிஞர் சிலர்க்கு அவா எழும். கடலுக்கு மிக அருகில் உள்ள சில கிணறுகளில் தீஞ்சுவைத் தண்ணீர் கிடைப்ப தாயிருக்க, அவற்றையடுத்திருக்கும் கடலில் மட்டும் உப்பு மிகுந் திருத்தல் வியக்கத் தக்கதன்றோ? இவ்வேறுபாட்டிற்குக் காரணம் என்னையென்று ஆராய்ந்து பார்த்தால், கடலின் நீர் மேல்நீராயிருப்பதும், அதனையடுத்துள்ள நல்ல கிணற்றுநீர் கீழ்நீராயிருப்பதுமேயாம் என்பது புலனாகும். நிலத்தின் பல பகுதிகளிலும் மலைகள் மேலும் பெய்த மழை நீர் ஆங்காங்கு பலவகை உப்புகளையும் கரைத்தெடுத்து ஆறுகளின் வழியே கொணர்ந்து கடலின்கட் சேர்த்துவிடுகின்றது; விடவே கடல் மேல் நிற்கும் நீர் உப்புடையதாகின்றது. மற்றுக் கடலடுத்த கிணற்று நீரோ கிணற்றின் அடிப்படையிலிருந்து மேலே

சுரப்பது; அவ்வடிப்படையிலுள்ள நிலம் உப்பில்லாததாயின் அதன்கட் சுவறிய மழைநீரும் தூயதாய் இன்சுவை மிகுந்து பருகுவதற்குப் பயன்படுவதாய் நிற்கும். அவ்விருவகை நீரும் வேறுபடுவதற்குக் காரணம் இவையேயாதல் கண்டு கொள்க. கடல் நீரில் எழுவகையுப்புகள் கரைந்து கலந்திருக்கின்றன என்று அறிஞர்கள் பகுத்துணர்ந்திருக்கின்றார்கள். இங்ஙனமாகக் கடல் உப்பு நீர் உடையதாதல் பற்றி அஃது ‘உவரி’ என்ற பெயரால் வழங்கப்பட்டு வருகின்றது. இவ்வாறெல்லாம் தமிழ் மக்கள் பண்டுதொட்டுக் கடலுக்கு வழங்கிவரும் பல பெயர் களைக் கொண்டு, அவர்கள் இவ்வையம் சூழ்ந்த கடலின் இயற்கைத் தன்மைகள் பலவும் நன்கு ஆராய்ந்துணர்ந் தவர்களாதல் தெளிந்து கொள்ளப்படுமென்க.

# 7. பாலை வெளி

பாலைவெளி என்பது புல் பூண்டுகள் மரஞ்செடி கொடிகள் வளராத மணல் நிலமும், பாறை நிலமும் ஆகும். நிலம் நன்றாய் நனைந்து வளம்பெறாததாய் வேண்டும் அளவு மழை பெய்யாமலும் கீழே நீரூற்றுகள் இல்லாமையாலும் பச்சைப் பயிர்கள் சிறிதும் வளராத பெருநிலப் பரப்புகளே பாலை நிலங்கள் என்று சொல்லப்படுகின்றன. உயிர் வாழ்க்கைக்கு முதன்மையாக வேண்டப்படும் எந்தப் பயிரும் இவற்றின்கண் நிலை பெறாமையால், வேறு சிற்றுயிர்களும், விலங்குகளும், மக்களும் இப்பாலைவெளிகளில் காணப்படுவ தில்லை. நிலத்தின் கீழ் ஆழமாக வேர் ஊன்ற வல்லனவும் மழையினுதவியை எதிர்பாராமலே வளரத் தக்கனவுமான சப்பாத்திக் கள்ளி அல்லது நாகதாளி என்னும் முட் செடிகளும் இவற்றை ஒத்த வேறு சில செடிகளுமே சில பாலை வெளிகளில் செழிப்பாகக் காணப்படுகின்றன. ‘எட்டி பழுத் தென்ன ஈயாதார் வாழ்ந்தென்ன’ என்னும் பழமொழிப்படி இந் நாகதாளிச் செடிகள் மக்களுக்கும் பிற உயிர்களுக்கும் பெரும்பாலும் பயன்படுதல் இல்லாமையால், வறண்டு வற்றிய பாலை நிலங்களுக்கு ஏற்ற செடிகள் இவையே ஆகும்.

மழையும் ஆறும் ஏரியும் குளமும் நீரூற்றும் மலிந்த இத்தென்னாட்டின்கண் வறண்ட பெரிய பாலைவெளிகள் எங்குமேயில்லை. திருச்செந்தூர் இராமநாதபுரப் பக்கங் களில் காணப்படும் நெய்தல் நில மணற் பரப்புகளைப் பாலைவெளி என்று கூறுதல் ஆகாது. ஏனென்றால், அம் மணற்பாங்குகளில் பனை தென்னை உடை கருவேல் முதலான மரங்களும், எல்லா உயிர்களுக்கும் பயன்படத்தக்க ஏனை பயிர்ப் பச்சைகளும் செழுமையாய் வளர்ந்து பயன்தரக் காண்கின்றோம். இத்தென்னாட்டிற்கும், இதனை அகத் தடக்கிய இவ்விந்திய நாட்டிற்கும் புறம்பே உள்ள நிலப்

பகுதிகளிலேதாம் எட்டுணையும் பயன்படாப் பெரிய பெரிய பாலை வெளிகள் அமைந்திருக்கின்றன. இப்பாழ் நிலங்கள் பெரும்பாலும் இந்நிலவுலகத்தின் மேல்பால் எல்லையி லேயே காணப்படுதலை நினைவில் வைத்தல் வேண்டும். இந்நிலவுலகத்தில் காணப்படும் பெரும் பாலைவெளிக ளாவன; சகாரா, கலகாரி, கொலொராடோ, ஆதகாமா, மேல் ஆத்திரேலியா, கோபி முதலானவைகளே ஆகும்.

இவை தம்முள் சகாரா என்னும் பாலைவெளியே உலகத்தில் மிகப் பெரியது. இஃது ஆப்பிரிக்கா தேயத்தின் வடபகுதியில் உள்ளது. இதன் நீளம் மூவாயிரம் மைல், அகலம் ஆயிரம் மைல் என்று கணக்கெடுத்திருக்கிறார்கள். இது பெரும்பாலும் மஞ்சள் நிறமான புதைமணல் வாய்ந் தது. இதன்கண் வீசுங் கடும் சுழற்காற்று இதன் மணலை மலை போல் மேலெழுப்பிச் சுழற்றிக் கொண்டு செல்லும் தோற்றமானது. மஞ்சள் மலையொன்று மேலெழுந்து விரைந்து சுழல்வதையே ஒத்திருக்கும். இங்ஙனம் எழுந்து சுழலும் மணற் குன்றானது ஒரோவொருகால் அப்பாலை வெளியில் வழிச் செல்லும் வணிகர் குழுவை அப்படியே தன்னுட் புதைத்து விடுதலும் உண்டு. அதனால் அவ்வெளியினூடு செல்லும் வணிகர் கூட்டங்கள் அக்காற்று வீசாத காலம் பார்த்தே அதன்கட் செல்வர். மேற்குறித்த சுழற் காற்றினால் ஆங்காங்குத் தொகுத்துச் சேர்க்கப்பட்டிருக்கும் மணற் குன்றுகள் இப்பாலை நிலமெங்கும் காணப்படுகின்றன. இவைகளுட் சில கடல் மட்டத்திற்கு மேல் ஆயிர அடி உயரமுள்ளனவாகவும் இருக்கின்றன. இம்மணற் குன்றுகளே அன்றிச் சிவந்த மலைப் பாறைகளும் இவ்வெளியின் இடையிடையே சிதறித் தோன்றுகின்றன. இம்மலைப் பாறைகளுக்கும் மணற் குன்றுகளுக்கும் நடுவே பள்ளத் தாக்குகளும் உள்ளன. நீர்ப்பசை அற்று வறண்டு எந்தப் பக்கத்தில் பார்த்தாலும் மணலும் மணற்குன்றுகளும் மலைப்பாறைகளும் உடையதாய் கதிரவன் வெப்பத்தால் அழன்று கனலாயிருக்கும். இப்பெருமணற் பரப்பானது நோக்குவார்க்கும் தன்னூடு வழிச் செல்வார்க்கும் பெருநடுக்கத்தை விளைவிப்பது எனினும், இஃது இடை யிடையே ஒன்றுக்கொன்று தொலைவான இடங்களில் கொழுமையான பேரீச்ச மரத் தோப்புகளும் இளமரக் காக்களும் வாய்ந்துள்ளன என்றால் எவர்க்குதாம் வியப்புண்

டாகாது? இது கொண்டு எத்தனைக் கொடிய இயற்கை யமைப்பிலும் உயிர்களுக்கு இனியவான மென்தன்மைகள் உள்ளடங்கி இருக்குமென்பது இனிது புலனாகின்றதன்றோ? உயிரைக் கொள்ளை கொள்ளும் கொடிய நெருப்புக் காற்றுக்கும் கதிரவன் வெப்பத்திற்கும் அஞ்சாமல் அவற்றையும் ஊடுருவி வரும் அரும் பெருமுயற்சியுடையார்க்கு, ஆண்டவன் தன் தண்ணருளை வழங்கும் அடையாளமாகவே, வளப்பம் மிகுந்த இத்தோட்டங்களைத் தருதல் வேண்டும். இவற்றின் கண் ஓவாது சுரந்து ஒழுகும் நீர் ஊற்றுகளும் அவற்றால் நீர் நிறைந்து நிற்கும் வாவிகளும் பால்போலுந் தீஞ்சுவை அமிழ்தை, நாவறண்டு உடல் கரிந்து வரும் வழிப்போக்கர்க்கு ஊட்டு கின்றன; இவற்றில் செழுமையாய் வளர்ந்து பச்சைப் பசேலென நிற்கும் பேரீச்ச மரங்கள் அத்தி மரங்கள் நாரத்தை மரங்கள் கொடி முந்திரிக் கொடிகள் முதலியன, தம்மகத்துக் குலை குலையாய் தாமாகவே பழுத்துத் தொங்கும் கற்கண்டு அனைய கனிகளை ஏராளமாய்த் தந்து அவர்தம் கடும் பசியை ஆற்றுகின்றன. இவைகளே அன்றி, நெல்லும் வேறு சில பயறுகளும் கூட அவ்இளமரக்காக்களின் ஊடே ஊடே தாமாகவே செழிப்பாய் வளர்ந்து வழிச் செல்வார்க்கு வேண்டும் உணவுப் பொருள்களை உதவுகின்றன.

இப்பெரும் பாலைவெளியினூடு அஞ்சா நெஞ்சினராய் வழிச் செல்லும் வணிகர் யாவர்? அவர் எவ்வாறு அப்புதை மணற்பரப்பைக் கடந்து செல்கின்றனர்? என்னும் வினா இயல்பாக எழுமாதலால், அவற்றிற்கு விடையும் சிறிது இங்கு இயம்புவாம். இப்பாலை நிலத்திற்குக் கிழக்கெல்லையிலுள்ள அரேபியா தேயத்து அராபிக்கார வணிகர்களே தம் பெண்டு பிள்ளைகளுடன் அம்மணல்வெளியைக் கடந்து செல்கின் றார்கள்.

இவர்கள் அதன் ஊடு செல்வதற்குப் பயன்படுத்துவன ஒட்டகங்களே ஆகும். ஒட்டகத்தைத் தவிர வேறு எந்த விலங்கும் புதைமணலிற் பெருஞ் சுமைகளைச் சுமந்து கொண்டு கடவாது. ஏனென்றால் ஒட்டகத்தின் காலடிகள் அகலமாய் பிளவின்றி உரலடி போல் சப்பையாய் தசை மிகுந்து இருத்தலால் அவை மணலுள் அழுந்தா; மற்றும், குதிரைக் குளம்படிகள் குறுகலாய் கெட்டியாய் இருத்தலாலும், மாட்டின் குளம்புகள்

பிளப்புள்ளனவாய் அங்ஙனமே சிறியவாய் கெட்டியாய் இருத்தலாலும் அவ் இருவகை விலங்குகளின் கால்களும் புதைமணலிற் புதைந்துவிடும்; ஆகையால், இவை மணல் வெளிகளில் நடவா. ஆனது பற்றியே அராபி வணிகர்கள் இம்மணல் வெளியினூடு செல்வதற்கு ஒட்டகங்களையே பழக்கிப் பயன்படுத்தி வருகின்றனர். மேலும், ஒட்டகங்கள் பசுந்தழைகளையும், தண்ணீரையும் தவிர வேறு எதனையும் உட்கொள்வதில்லை; அதனால் அவற்றை வளர்ப்பவர்க்குச் செலவு சிறிதுமே இல்லை. அது அல்லாமலும், ஒட்டகமானது ஓரிடத்தில் தண்ணீர் பருகினால், திரும்பப் பல நாட்கள் வரையில் தண்ணீர் வேண்டாது; ஏனென்றால், அதன் வயிற்றகத்தேயுள்ள தண்ணீர்ப்பை ஒரு பெரிய குடத்தின் அளவுள்ளது; ஓரிடத்திற் பருகிய நீரினால் அஃது அதனை நிரப்பிக் கொள்ளுமாயின், அது நீர்விடாயின்றிப் பல நாட்கள் உயிர்வாழ வல்லது. ஆகவே, நூற்றுக்கணக்கான மைல் வரையில் தண்ணீர் சிறிதும் கிடைக்கப் பெறாத சகாராப் பாலை வெளியில் எத்தனையோ திங்கள் வழிச் செல்ல வேண்டியவர் களான அராபி வணிகர்க்கு ஒட்டகத்தினும் பயன்படும் வேறொரு விலங்குண்டோ! ஆகவே, அராபி வணிகர்கள் தம்முடைய ஒட்டகங்களின் மேல் அம்பாரி கட்டி, அதில் தம் பெண் பிள்ளைகளையும், உணவுப் பண்டங்களையும், வணிகச் சரக்குகளையும் ஏற்றிக் கொண்டு, இப்பாலை நிலத்தினூடு நெடுவழி செல்வார்கள். இவ்வணிகர்கள் இதன்கண் ஒருவர் இருவராய் செல்லார்கள். நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான வணிகர்கள் ஒருங்கு சேர்ந்துகொண்டுதான், அஞ்சத்தக்க இந்நெடுவழியில் செல்வார்கள். ஒட்டகங்களின் மேல் ஒருவர் பின் ஒருவராய் தேர்வடம் பிடித்தாற்போல் இவ்வணிகர் குழாஞ் செல்வதைக் காணுங்காட்சி பெரியதொரு புதுமையாய் வேடிக்கையாய் இருக்கும்.

இவ்வாறு செல்லும் அராபி வணிகர்கள் நூற்றுக்கணக் கான மைல் கடந்து சென்று, இப்பாலைவெளியின் இடை யிடையே உள்ள வளவிய பசுமரத் தோட்டங்களில் சில நாட்கள் தங்கித் தங்கி இளைப்பாறிக், கடைசியாகப் பல முகமாய்ப் பிரிந்து, இப்பாலை நிலத்தின் மேல் விளிம்பைச் சூழ விளங்கா நிற்கும் நகரங்களுள் சென்று தாம் கொண்டு சென்ற சரக்கு களை விலைசெய்து விட்டு, அவ்வந்நகர்களில் கிடைக்கும் வேறு

பண்டங்களை ஏற்றிக் கொண்டு, சென்ற வழியே திரும்பித் தம் ஊர்க்கு மீள்வர். இங்ஙனமாக இச்சகாராப் பெரும் பாலை நிலமும் அராபி வணிகரின் வாணிகச் செலவுக்குப் பயன்படுதல் கண்டு கொள்க.

இப்பாலைவெளியின் இடையிடையே அமைந்துள்ள கொழுவிய பசுமரத் தோட்டங்களில் கொடிய கொள்ளைக் காரர்கள் குடியிருந்து கொண்டு வழிப்பறி செய்வது வழக்கம். ஆயினும், அராபி வணிகர்கள் படைக்கலன்கள் பூண்டு பெருங் கூட்டமாய்ச் செல்லத் துவங்கிய பின், அக்கொள்ளைக்காரரின் கொட்டம் அடங்கியது. சகாரா நிலத்திற்கும் அதனைச் சூழ்ந்த நகர்கள் பலவற்றிற்கும் உரியவரான பிரஞ்சு அரசியலாரும், அக்கொள்ளைக் கூட்டங்களின் குறும்பை அடக்கி, அப்பாலைவெளி நெடுகப் புகைவண்டி விடுதற்கும், பாட்டை அமைக்கவும் ஏற்பாடு செய்து வருகின்றனர்.

இனிச், சகாராவுக்குப் பிற்சொல்லப்பட்டதாகிய 'கலகாரி' என்னும் பாலைவெளி, தென்னாப்பிரிக்காவில் நாரத்தையாற்றிலிருந்து (Orange) அறுநூறு மைல் நீளமுடைய தாகக் கிடக்கின்றது. இதில் உப்பளங்கள் மிகுதியாய் இருக்கின்றன.

இனிக், 'கொலொராடோ' என்னும் பாலை நிலம், வட அமெரிக்காவின் இணையரசு நாடுகளின் மேற் பகுதியில் தொகுதி தொகுதியான மலைத் தொடர்கள் வாய்ந்ததாய்ப் பசுமரம் ஏதுமின்றிப் பாழாய்க் கிடக்கின்றது. ஆனாலும், இதன் மையத்தில் உள்ள மலைகள் மட்டும் அருவி நீரும், அதனாற் செழுமையான காடுகளும் உடையதாய்த் திகழ்கின்றன.

இனி, 'ஆதகாமா' என்னும் பாலைவெளி தென்னமெரிக் காவில் வடசில்லி நாட்டை அடுத்துள்ளது. இதுவும் மலைப் பாறைகளாலும், அவை தம்மிலிருந்து சிதர்ந்த குண்டுக் கற்களாலும் நிறைந்திருக்கின்றது. இதன்கண் அடர்ந்து முளைத்திருக்கும் ஒரு வகை நாகதாளிகள், குதிரை களையும் குதிரைமேற் செல்லும் ஆடவரையும் தமக்குள் மறைத்து விடத்தக்க அத்துணை உயரமுள்ளன.

இனி, மேல் ஆத்திரேலியாவிலுள்ள பாலைவெளியின் இயல்பை இன்னும் எவரும் சென்று காணவில்லை. மற்றும்

நமது இந்திய நாட்டுக்கு வடக்கே நெடுந்தொலைவில் உள்ள மங்கோலியா தேயத்தில் 'கோபி' என்னும் பாலைவெளி இருக்கின்றது. இது, சகாரா வெளியைப் போல் புதை மணல் நிறைந்ததாயும் கொடிய சூறை அனற்காற்றால் திரட்டிக் குவிக்கப்பட்ட மணற் குன்றுகளும், அவற்றினிடையே பல பள்ளத்தாக்குகளும் உடையதாயும் இருக்கின்றது. இது வெயிற் காலத்தில் வெப்பம் மிகுந்தும் குளிர்காலத்தில் குளிர்மிகுந்தும் கிடக்கின்றது.

இனி, நமது தமிழ்நாட்டின் தெற்கே இருந்து கடலுள் அமிழ்ந்து போன பண்டைத் தமிழகமாகிய குமரி நாட்டின் நடுவே ஒரு பெரும் பாலைவெளி மணல் நிறைந்ததாய் இருந்தமையும், அதனூடு சென்று வணிகம் புரிந்த வணிகர் குழாங்கள் ஒட்டகங்கள் மேல் இவர்ந்தே அதனைக் கடந் தைமையும், அப்பண்டைக் காலத்தில் இயற்றப்பட்ட அரும் பெருந் தமிழ் முதல் நூலாகிய தொல்காப்பியத்தில் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறும் குறிப்புகள் கொண்டு நன்குணரப் பெறுகின்றோம்.

# 8. சிறுவர்க்குரிய நாட்கடன்கள்

*சிறுவர்கள் எல்லாரும் காலையில் கிழக்கே வெயில் வெளிச்சம் தோன்றும்போது உறக்கம் நீங்கி எழுதல் வேண்டும். தூக்கம் என்னும் இருளில் அறிவு இழந்து புதைந்து கிடந்த உயிர்களெல்லாம் அவ்விருளினின்றும் மீண்டெழுந்து அறிவு வெளிச்சம் பெறுதற்கு, அப்போது வெளியே தோன்றும் வெயில் வெளிச்சமே உதவியும் அடையாளமுமாய் இருக்கின்றது. ஆதலால், காலைப் பொழுதில் ஒரு நொடியும் வீண்போகாமல் அந்நேரத்தில் படுக்கையைவிட்டு எழுந்திருக்கும் பழக்கத்தைச் சிறுபருவத்திலேயே பழகிக் கொள்ளுதல் முதன்மையானது.*

*பள்ளிக்கூடத்தில் பயிலும் சிறுவர் சிலர் இரவின் பிற்பகுதியில் நான்கு மணிக்கெல்லாம் துயில் நீங்கி எழுந்து தம்முடைய பாடங்களை விடியும் மட்டும் ஓதி, அதன்பின் கதிரவன் தோன்றும் விடியற்காலையில் மறுபடியும் உறங்குகின்றனர். மற்றும் சிலர் அங்ஙனம் உறங்காமல் தமக்குரிய முயற்சிகளைச் செய்யப் புகுகின்றனர். இவ்வாறு செய்வது பிசகு. கதிரவன் மேல்பால் மறைந்து மாலைக் காலத்தில் மட்டும் ஒன்பது மணி வரையில் இளஞ்சிறார்கள் தம்முடைய பாடங்களை விளக்கு வெளிச்சத்தில் ஓதலாமேயன்றி, இராக்காலத்தின் பிற்பகுதியில் உறக்கம் நீங்கி அங்ஙனம் ஓதுவது ஆகாது. ஏனென்றால் நூல் ஓதும் மாணாக்கர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் இரவின் பிற்பகுதியிலேதான் அயர்ந்த தூக்கம் நிகழ்கின்றது; அப்போதுதான் அவர்களுடைய மூளையானது இனிதாக ஆறுதலுற்றிருக்கின்றது. மக்கள் மட்டுமேயன்றி எல்லாச் சிற்றுயிர்களும் அந்நேரத்தில் இனிய துயிலில் அமர்ந்திருக்கின்றன. கதிரவன் எழுவதற்கு முற்பட்டதாகிய அவ்வைகறைப் பொழுதில் வீசுங் குளிர்ந்த மெல்லிய காற்றானது, அத்துயிலுக்கு இனியதாய், எல்லா உயிர்கட்கும் பெரியதோர் ஆறுதலைத் தருகின்றது. அவ்வளவு அமைதிக்கு*

ஏற்ற அந்நேரத்தில் கண் விழித்திருந்து நூல் ஓதிய மாணாக்கர்க்குத் தலைவலியும் மயக்கமும் காய்ச்சலும் வயிற்றுளைச்சலும், அடுத்தடுத்து வருதலை யாம் பலகாற் கண்டிருக்கின்றோம். அதுவேயுமன்றிப், பாரிஸ் மாநகரத்தி லுள்ள ஆசிரியர்கள், தம் மாணாக்கர்களை விடிய இரண்டொரு மணிநேரத்திற்கு முன்னமே படுக்கையினின்றும் எழச் செய்து நூல் ஓதப் புரிந்து வந்த காலங்களிலெல்லாம், அவர்கள் பகற்பொழுது முழுவதும் தூக்கமயக்கம் உடைய ராயும் சுறுசுறுப்பு இல்லாதவராயும் இருந்தன ரென்றும், அங்ஙனம் செய்யாது விடியும் வரையில் அவர்கள் அயர்ந்து தூங்குமாறு விடுத்து, விடிந்தபின் அவர்கள் தாமாகவே எழுந்து தத்தம் கடமைகளைச் செய்யுமாறு ஒழுங்கு செய்தபிறகே அவர்கள் தெளிந்த அறிவும் சுறுசுறுப்பு முடையராய் ஒழுகின ரென்றும் தெரிவித்திருக்கின்றனர். ஆகவே, பகலவன் கிழக்கே தோன்றும் காலை ஆறு மணிக்கெல்லாம் சிறுவர்கள் தாமாகவே உறக்கம் நீங்கி எழுதலே நன்றென்று உணர்ந்து கொள்க.

அங்ஙனம் துயில் நீங்கி எழும்போதே ஒளி வடிவான கடவுளை நினைந்து வணங்குக. கடவுளை நினைந்து உருகிய பெரியோர்கள் அக்கடவுள்மேல் பாடிய இரண்டொரு பாடல்களை மெல்லிய இனிய குரலில் பாடி அவரை வணங்குதல் மிக நன்று. தன்னினும் சிறந்த தன்னைப் படைத்த ஆண்டவனது அருளொளியை இவ்வாறு காலையில் தன் அறிவு மலரும் காலத்திலேயே நன்றியுடன் நினைந்து குழையும் நெஞ்சுடைய ஒருவனுக்கு அந்நாள் முழுதும் அவன் அகத்தும் புறத்தும் அருள் மணம் கமழ்ந்து கொண்டிருக்கும். அவனது அறிவு துலக்கமாய் இருக்கும். அவன் எந்த நன் முயற்சியிற் புகுந்தாலும் அது செவ்வனே நிறைவேறும். அவனைக் காண்பவர்கள் எல்லாரும் அவன் மீது அன்புடையராவர்.

இவ்வாறு கடவுளைத் தொழுதபின் குளிர்ந்த நீர் கொண்டு கண்களைக் கழுவித் துடைத்துவிட்டுக், கண்ணாடி யில் தன் முகத்தையும், அதன்பின் இரவிவன்மரையொத்த சிறந்த ஓவிய ஆசிரியர் வரைந்த அழகிய ஓவிய உருவங் களையும் உற்று நோக்கி மகிழ்க. உள்ளமானது வேறு நினைவுகளால் கலக்குறாது தெளிவாய் இருக்கும் விடியற்

காலையிலே இங்ஙனம் அழகிய உருவங்களைப் பார்த்து வரும் சிறார் நாளேற நாளேற அழகிய உருவும் விழுமிய அறிவும் செழுவிய செயலும் உடையராகுவர்.

அதன்பின் கட்டாயமாகச் செய்தற்குரியது வயிற்றில் உள்ள மலச்சக்கையை வெளிப்படுத்துவதேயாகும். சிறுவர் சிலர் பலர் காலையில் இதனைச் செய்யாமல் ஓதுதல், எழுதுதல் முதலான முயற்சிகளைச் செய்துவிட்டு, அதன்பின் மலங் கழிக்கச் செல்கின்றனர். விடியற்காலையிலேயே வெளிப்பட வேண்டிய சக்கை வெளிப்படாமல் குடலுக்குள் இருக்குமாயின், அது கருகிக் குடரைப் புண்படுத்துவதுடன், இரத்தத்தையும் நஞ்சாக்கும். அதனால் மூலச்சூடும், கண்ணெரிவும், மேனி யெங்கும் சொறி சிரங்கும் ஒவ்வொருகால் வயிற்றுளைவும் உண்டாகும். ஆதலால் காலையிற் செய்யவேண்டிய முதன் முயற்சி மலநீர் கழித்தலேயாம்.

நகரங்களின் உள்ள மாணாக்கர்கள் தம் வீட்டுக்குப் புறம்பே சென்று குடரைத் துப்புரவு செய்தல் இயலாது. ஆனால், நகர்ப்புறங்களிலும் நாடுகளிலும் இருப்பவர்க்கோ அவ்வசதியுண்டு. ஆகையால் அத்தகையவர்கள் காலையில் ஒருகல் தொலைவுக்குக் குறையாமல் நடந்து சென்று, ஒதுக் கிடங்களில் குடரைத் துப்புரவு செய்து திரும்புக. இல்லங்களில் கட்டுப்பட்டு நிற்கும் நச்சுக்காற்றையே எந்நேரமும் உள்ளிழுக்கும் சிறுவர்க்கு, இங்ஙனம் வெளியே செல்வதால் தூயகாற்றை உட்கொள்ளும் சிறந்த நன்மை உண்டாகின்றது. அதனொடு கை கால் முதலிய உறுப்புகள் நன்கு அசைந்து உடம்புக்கும் வலிவையும் நலத்தையும் தருகின்றன. நகரங்களில் உறையும் சிறாரும் இயன்ற மட்டும் காலை மாலை வேளைகளில் உலாவுதல், நடத்தல், ஓடல், குதித்தல், பந்தாடல் முதலிய உடற்பயிற்சிகளில் தமதுடல் நலத்திற்கும் ஒழிவு நேரத்திற்கும் வேண்டுமளவு கட்டாயம் பழகிவரல் வேண்டும்.

குடரைத் துப்புரவு செய்தபின், ஆலங்குச்சி வேலங்குச்சி நுணாஇலை முதலியன கொண்டு பற்களை நன்றாகத் தூய்மை செய்க. இவை அகப்படாக்கால், வெள்ளிய பட்டுப் போன்ற தூய சாம்பலை வடிகட்டி வைத்துக் கொண்டு, அத்தூளை யிட்டுப் பல் துலக்கலாம். அல்லது உப்பும் அடுப்புக்கரியும் சேர்த்து அரைத்த பொடி கொண்டும் பல் தேய்க்கலாம்.

இவைகளைத் தவிரப் பலராற் செய்து விற்கப்படும் பற் பொடிகளைப் பயன்படுத்துதல் நன்றன்று.

அதற்குமேல் வெந்நீரிலாயினும், தண்ணீரிலாயினும் நீராடுக. சீயக்காய்ப் பொடி கொண்டாவது, வெள்ளை ரோசாச் சவர்க்காரங் கொண்டாவது எண்ணெய்க் கசண்டையும், அழுக்கையும் கழுவிவிடுக. தலைக்கு நெய்ப்பானது ஏதுந் தேய்த்து முழுகல் வேண்டினால், எள்நெய், தேங்காய்நெய், வாதுமைநெய், ஆவின் நெய் முதலியவற்றுள் எது நலந் தருவதாகக் காணப்படுகின்றதோ அதனைப் பயன்படுத்திக் கொள்க. நெய்முழுக்குச் செய்யும்போது வெந்நீரில் முழுகுதலே மிகச் சிறந்தது. நெய் முழுக்கு ஆடிய நாட்களில் நீர்க் கோவையினை விளைவிக்கும் குளிர்ந்த உணவுப் பண்டங்களை விலக்கி விடுக; அங்ஙனமே அந்நாட்களில் மூளைக்கும் உடம்புக்கும் மிகுந்த உழைப்பினைத் தருதல், நூல் ஓதும் மாணாக்கர்க்கு ஆகாது.

நீராடியபின் தோய்த்துலர்ந்த தூய ஆடைகளையே உடுத்துக. முன்நாள் கட்டியிருந்த ஆடையைப் பின்நாளில் உடுத்தல் சிறிதும் ஆகாது. உடம்பிலிருந்து வெளிப்படும் பல்லாயிரக்கணக்கான நச்சுப் பூச்சிகளும், ஊரிலுள்ளார் உடம்புகளிலிருந்தும் தெருப்புழுதி சாக்கடைக் குப்பை களிலிருந்தும் வெளிப்படும் பல கோடிக்கணக்கான நச்சுப் புழுக்களும் முன்நாள் உடுத்த உடைகளில் ஒட்டியிருக்கு மாதலால், அவைகளை அறவே விலக்கித் தூயவைகளையே உடுத்துக.

இவ்வாறு நீராடி வந்த பின்பு இறைவனைத் தொழுது, காலை வேளையில் எளிதாகச் செரிக்கத்தக்க நொய்ய உணவு எஃது இசைந்ததோ அதனை உட்கொள்க. ஆனாலும் காப்பி தேயிலை கொக்கோ முதலிய பருகுநீரில் நோய்க்கு வித்தான புளிப்பு நஞ்சு உளது என்று அறிவில் சிறந்தோர் ஆராய்ந்து உரைத்தலால், அவைகளை முற்றுமே விலக்கி விடுதல் வேண்டும். அவற்றிற்கு மாறாகக் கொத்துமல்லி, நன்னாரிவேர், ஏலக்காய் என்னும் மூன்றும் கலந்து இடித்ததூளை நீரி லிட்டுக் காய்ச்சிக் காய்ச்சிய நீரை வடிகட்டி ஆவின்பாலும் பனங்கருப்பட்டியும் சேர்த்துப் பருகுக. இது மிகவும் குளிர்ச்சி செய்வதாகக் காணப்பட்டால் சுக்குத்தூளும், அவற்றோடு

கலந்து கொள்ளலாம். இங்ஙனம் செய்துகொள்ள இயலாத வர்கள் ஆவின்பால் சேர்த்த பச்சரிசிக் கஞ்சி குடிப்பது நன்று. அதுவும் செய்ய இயலாதவர்கள் பழையசோறு சிறிது உட் கொள்ளுதல் நன்று.

இவ்வளவும் ஒன்று அல்லது ஒன்றரை மணி நேரத் திற்குள் செய்து முடித்துக் கொள்ளலாம். காலையில் ஆறுமணிக்குத் துயில் நீங்கி எழுந்த ஒரு சிறுவன் ஏழு அல்லது ஏழரை மணிக்குள் மேற்கூறிய காலைக் கடன்களை ஒழுங்காகச் செய்து முடித்துக் கொண்டு, அதன்பிறகு தன் பாடங்களை ஓதத் துவங்கல் வேண்டும். பாடம் ஓதும் போது தன் கருத்தை வேறொன்றிலும் செல்ல விடாமல், எந்தப் பாடத்தில் எந்தப் பொருள் சொல்லப்படுகின்றதோ அதில் தன் நினைவைப் பதித்தல் வேண்டும். நினைவைப் பல இடங்களில் சிதறவிட்டுக் கொண்டு, தவளை போல் எவ்வளவு கூவிப் பயின்றாலும், பாடப் பொருள் மனத்திற் பதியமாட்டாது. உரத்துக் கூவாமல் மெல்லிய குரலிலாவது, அன்றி வாய்திறவாமல் அமைதியா யிருந்தாவது பாடப்பொருளையும் சொல்லையும் பொருள் செவ்வையாகத் தெரிந்து கொண்டு பயிலுதல் முதன்மை யானது. இதற்கு அகராதியைப் பக்கத்திலேயே வைத்துக் கொண்டு, சிறிதும் சோம்பாது, தெரியாத சொற்பொருள்களை அதன்கண் பார்த்துப்பார்த்துத் தெரிந்து கொள்க. அன்றாடம் பாடத்தில் வரும் அருஞ்சொற்பொருளையும், முதன்மையாக நினைவில் வைக்க வேண்டிய பகுதிகளையும், பாடச் சுருக்கங் களையும் ஒருகுறிப்பேட்டில் அவ்வப்போது குறித்து வைத்துக் கொண்டு, அவைகளைப் பின் நாட்களில் திருப்பித் திருப்பிப் பார்த்து நினைவுக்குக் கொண்டு வருக.

கணக்குப் போடுதல், தேசப்படம் வரைதல், ஓவியம் எழுதுதல் முதலான பயிற்சிகளைச் செய்தற்கு நேரம் மிகுதி யாய் வேண்டுமாதலால், முதலிலேயே இவைகளைத் துவங்கி விடாமல், விரைந்து படிக்கக் கூடிய பாடங்களை முதலில் எடுத்துப் பயின்று, அதன்பின் இவைகளைச் செய்து பழகுக. அவ்வாறின்றி, முதலில் கணக்குப் போடுதல் முதலான பயிற்சிகளைச் செய்து நேரத்தைக் கழித்து விடும் மாணாக்கர் கள் பின்னர் ஓதவேண்டிய பாடங்களுக்கு நேரம் இல்லாமை யால் அவற்றைப் பயிலாமலேயே பள்ளிக்கூடம் சென்று

ஆசிரியரால் ஒறுக்கப்படுவதுடன் ஆராய்ச்சியிலும் தவறி விடுகின்றனர். ஆதலால், முதலில் எளிதாகப் பயின்று கொள்ளத் தக்கவைகளையே தெரிந்து பயிலுதல் வேண்டும்.

இவ்வாறு ஒன்பது அல்லது ஒன்பதரை மணிவரையில் அன்றாடப் பாடங்களையும் பழம் பாடங்களையும் பயின்ற பின், நேரந்தவறாமல் பத்துமணிக்கெல்லாம் பிள்ளைகள் பள்ளிக் கூடங்களுக்குப் போய்த் தத்தம் வகுப்புகளில் தத்தம் ஆசிரியரை அன்புடன் வணங்கி அமைதியாயிருந்து, அவர் கற்பிப்பவை களை அவாவுடன் கேட்டு உள்ளத்தில் நன்கு பதித்தும், அவர் கேட்கும் வினாக்கட்குப் பொருத்தமான விடைகள் மொழிந்தும், தம்மோடு உடன்பயிலும் மாணாக்கருடன் அன்புடன் கேண்மை கொண்டும் ஒழுகுதல் வேண்டும்.

இக்காலத்தில் பெரும்பாலும் எல்லாப் பள்ளிக் கூடங் களும் காலை ஒன்பதரை அல்லது பத்து மணிக்குத் துவங்கு வதால், அவைகளிற்பயிலும் மாணாக்கர்களுக்கும், அம் மாணாக்கர்களைப் பயிற்றும் ஆசிரியர்களுக்கும் காலைக் கடன்களை முடித்து அன்றாடப் பாடங்களைப் பார்த்து உள்ளத்தில் அமைத்துக் கொண்டு வருவதற்கு நேரமும் வசதியும் இருக்கின்றன. ஆனால் சிலபல திண்ணைப் பள்ளிக் கூடங்கள் மட்டும் காலை எட்டுமணிக்கெல்லாம் துவங்கு கின்றன. அப்பள்ளிக்கூடங்கட்குச் செல்லும் பிள்ளைகள் மிகச் சிறிய பருவத்தினராய் இருத்தலால், அவர்கள் மேற்கூறிய காலைக்கடன்களை எல்லாம் தெரிந்து செய்யக்கூடியவர் அல்லர் என்றாலும், அவர்தம் பெற்றோர்கள் அவர் செய்யக் கூடியவைகளை ஒழுங்காகச் செய்து பள்ளிக்கூடம் செல்லும் படி பழக்கி வருதல் முதன்மையானது.

இனிப் பகல் உணவு எடுப்பதற்கென்று கொடுக்கப்படும் ஒரு மணிநேர ஒழிவு நேரத்தில், சிறுவர்கள் உணவு கொண்ட பின், தம் தோழர்களுடன் இனிதாக விளையாடல் வேண்டும். ஒருவரையொருவர் பகைத்தலும் திட்டுதலும் அடித்தலும் கூடா. கெட்ட நடவடிக்கையுள்ள பிள்ளைகளுடன் நேசம் கொள்ளுதலும் ஆகாது; பகைத்தலும் ஆகாது. அவர்களுடன் நேசங்கொண்டால் அவர்களுடைய தீய இயற்கை உமக்கும் படிந்துவிடும்; அவர்களுக்கு வரும் துன்பம் உம்மையும் சாரும். அவர்களைப் பகைத்தாலோ, அவர்கள் உம்மைப் பழிப்பர்,

ஏசுவர், அடிப்பர், பிறரை ஏவியும் உமக்குத் தீங்கு செய்வர். ஆதலால், அவ்விருவகையிலும் அவர்களுடன் தொடர்பு கொள்ளாமல், அவரைக் காண நேரும்போதெல்லாம் இனிமை யாகச் சில சொற்களைப் பேசிவிட்டுப் போய்விடுக.

இனிப், பிற்பகல் முடிவில் பள்ளிக்கூடம் விட்டு வீட்டுக்குத் திரும்பும்போதும் தம் தோழர்களுடன் அமைதியாகத் திரும்பல் வேண்டும். வீட்டுக்கு உடனே திரும்பாமல் மைதானங்களில் விளையாடுதற்கேனும், கடற்கரைகளில் உலவுவதற்கேனும் கடைத்தெருவுகளிற் பண்டங்கள் வாங்குவதற்கேனும், ஏரி குளம் கூவல் கால்வாய் ஆறுகளில் நீராடுதற்கேனும் செல்ல வேண்டியிருந்தால், அங்ஙனஞ் செல்வதைக் காலையிலேயே நும் பெற்றோர் களுக்குத் தெரிவித்து, அவர்கள் நும்மைத் தேடி அலைந்து துன்புறாமல் செய்தல் வேண்டும். மேற்குறிப்பிட்ட இடங்களில் விளையாடுவதாயிருந்தாலும், மன மகிழ்வாய்ப் பொழுது போக்குவதாயிருந்தாலும், அல்லது நுமக்கு வேண்டுபவைகளை வாங்கிப் போவதாய் இருந்தாலும், உடம்பைப் பழுதுபடுத்திக் கொள்ளாமல் நோயை வருவித்துக் கொள்ளாமல் வண்டி, குதிரை, மாடு முதலியவற்றிற்கு இடையே செல்லாமல், கடைகளில் பண்டங்களைக் களவு செய்யாமல் பொய்பேசாமல் நுமக்கும் நும் பெற்றோர்க்கும் தீங்கும் துன்பமும் உண்டாக் காமல் அறிவாய் நேர்மையாய் நடந்து கொள்க. மாலையில் இருண்டுபோன பின் வெளியிடங்களில் சிலகாலம் இருளில் போக நேர்ந்தால் கையில் விளக்கில்லாமற் போகலாகாது. இன்ன நேரத்தில் வீட்டுக்குத் திரும்புவோம் என்று பெரியோர்களிடம் சொல்லி வந்தபடி, தவறாமல் அந்நேரத்தில் வீட்டிற்குத் திரும்பிவிடுதல் இளைஞர்களுக்குப் பெரும் கடமையாகும்.

இங்ஙனம் மாலையில் வீட்டிற்கு வந்த பின்னாவது அன்றி வருவதற்கு முன்னாவது வயிற்றிலுள்ள மலச்சக்கையைக் கழித்துவிடுதல் வேண்டும். பள்ளிக்கூடப் பிள்ளைகள் காலை மாலை இருபொழுதும் தவறாமல் மலச்சக்கை கழிக்கும் பழக்கத்தை உண்டாக்கிக் கொள்வார்களானால், அவர்கட்கு எத்தகைய நோயும் வராது. இக்காலத்து இளைஞர்கள் ஆண்டு முதிரா முன்னரே மூக்குக் கண்ணாடி இடுவது, மலச்சக்கையை

நீக்கி உடம்பைத் துப்புரவாக வைத்துக் கொள்ளாமை யினாலேதான். மலக்குடலில் அழுக்குச் சேரச் சேரக் கண்ணொளி மங்கும்; மூளை தெளிவாய் இராது. ஆதலால், மாணாக்கர் அனைவரும் தமது மலக்குடலை இரண்டு வேளையும் துப்புரவு செய்வதில் கருத்தாயிருக்க வேண்டும். அதில் கருத்தில்லாத பிள்ளைகளை அவர்தம் பெற்றோர்கள் கருதிப் பார்த்தல் கட்டாயமானது.

மாலையில் இல்லந்திரும்பிய பின் கட்டியிருந்த ஆடை களைக் களைந்துவிட்டுத் தூயன உடுத்து, இறைவனை வணங்கி நல்ல சிற்றுண்டி அருந்தி, இளைப்பாறி, ஒளி மிகுதியு முள்ளதொரு விளக்கு வெளிச்சத்தில் அதனொளி நேரே கண்ணுட்படாமல் ஒரு பச்சைக் காகிதத்தாற் சிறிது அதனை மறைத்து வைத்துக் கொண்டு பாடங்களை ஓதுதல் வேண்டும். சாய்ந்து கொண்டும், படுத்துக் கொண்டும், குனிந்து கொண்டும் ஓதாமல் நேரிருந்து ஓதுக. ஒரேயிருப்பாயிருந்து ஓதாமல் முக்கால் மணிநேரத்திற்கு ஒருகாற் பாடத்தை விட்டெழுந்து, கண்களைக் குளிர்ந்த நீராற் கழுவி, ஐந்து நிமிஷம் உலவி, அதன்பின் ஓதுக. இவ்வாறு மாலையில் ஒன்பது அல்லது ஒன்பதரை மணி வரையிற் பாடங்களைச் செவ்வையாகப் பயின்று, அதன்பின் உணவுகொண்டு உலவி உறங்குக.

இங்ஙனமாகப் பகற் பொழுதையும் இரவின் முற் பொழுதையும் ஒழுங்காகப் பயன்படுத்த வேண்டியிருக்கச், சிறுவர்களிற் பெரும்பாலார் முறைதவறி அப்பொழுதுகளை வீணே கழித்துவிட்டு, இரவில் வயிறுநிறைய உணவு கொண்டபின் கண்விழித்திருந்து பன்னிரண்டு ஒரு மணிவரையிலும், அல்லது விடியும் முன் நான்கு மணி யிலிருந்து காலை ஏழுமணி வரையிலும் நூல் ஓதுகின் றார்கள். இப்படிச் செய்பவர்கள் எல்லாரும் கண்ணோய் வயிற்றுநோய் மண்டைக் கிறுகிறுப்பு காய்ச்சல் இருமல் முதலிய நோய்களால் அடுத்தடுத்துத் துன்புறுத்தப்பட்டுக் கல்வியில் தேர்ச்சிபெறாது ஒழிதலுடன், மெலிந்து நரைத்து பழுத்து ஆண்டு முதிரா முன்னரேயும் மாண்டு போகின்றார்கள். ஆதலால், இரவில் வயிறு நிறைய உண்டபின் ஓதுதலும் ஆகாது. ஒன்பதரை மணிக்குமேல் உண்டபின் விழித்திருந்து பயிலுதலும் ஆகாதென்று கடைப்பிடிக்க.

# 9. ஆலமரமும் நாணலும்

*ஓர் ஆற்றங்கரையில் ஓங்கி வளர்ந்து அடிபெருத்த ஓர் ஆலமரம் இருந்தது; அதன் அருகே சில நாணல் புற்களும் வளர்ந்திருந்தன. அவ்வாற்றில் வெள்ளம் பெருகியோடும் போது, அந்நீரோட்டத்தின் வழியே அந்நாணற் புற்களும் வளைந்து கொடுத்து, வெள்ளம் குறைந்த பின் முன்போல் நிமிர்ந்து நிற்கும். அங்ஙனமே பெருங்காற்று வீசும்போது அது வீசும் முகமாகவே அப்புற்கள் தலைவளைந்து கொடுத்துக் காற்றுத் தணிந்த பின் முன்போலவே தலைநிமிர்ந்து நிற்கும். இதனை அருகிருந்து கண்ட ஓர் ஆலமரமானது அந்நாணற் புல்லை நோக்கி ஏளனஞ்செய்து, "நீங்கள் ஏன் என்னைப் போல் தலைநிமிர்ந்து நில்லாமல் நீருக்கும் காற்றுக்கும் தலைவளைந்து கொடுக்கின்றீர்கள்?" என்று வினவியது. "ஐயா, உங்களைப் போல் எங்களுக்கு உடம்பில் வலிவில்லை; ஆகையால், தலைவளைந்து கொடுப்பதன்றி வேறு என் செய்ய வல்லோம்!" என்றன நாணற்புற்கள். அச்சொற்கேட்டு அவ்வால மரம் தன் வலிமையை வியந்து இறுமாந்து நின்றது. பின்னர் சிலநாளில் ஒரு பெரும் புயற்காற்று வீச, அவ்வாற்றில் வெள்ளமும் பெருகி வந்தது. அப்போது அவ்வாலமரம் வெள்ளத்தால் வேர்கள் மேலே கிளப்பப்பட்டும் கிளைகள் காற்றால் அலைக்கப்பட்டும் கீழே சாய்ந்து விழுந்தது. நாணற்புற்களோ அவையிரண்டுக்கும் தலைவளைந்து கொடுத்து, அவை ஓய்ந்தபின் என்றும்போல் தலைநிமிர்ந்து நின்றன.*

*ஆகவே, இறுமாப்புடையவர்கள் தமக்கு மேற்பட்ட வலிமையுடையவர்களால் தலைதாழ்த்தப்படுவார்கள் என்பதும், பணிவாய் நடப்பவர்கள் எல்லாராலும் பாராட்டப் பட்டு என்றும் சிறந்த நிலையில் இருப்பார்கள் என்பதும் இதுகொண்டு அறிந்து கொள்க.*

## 10. ஒரு நாயின் அரிய செயல்

இவ்விந்திய நாட்டின்கண் உள்ள இரெயிப்பூருக்குப் பதினொரு கல் தொலைவில் ஒரு நாயினுக்கு எடுக்கப்பட்ட ஒரு சிறு கோயில் உண்டு. அதனுள்ளே ஒரு நாயின் சிறுவடிவம் வைக்கப்பட்டிருக்கின்றது. அதனை அங்குள்ள அவ்வூரவர்கள் போற்றி வருகின்றனர். அக்கோயில் அமைக்கப்பட்ட வரலாறு இது:

கூவி விற்கும் வணிகன் ஒருவன் தனக்குக் கடன் கொடுத்த ஒருவனாற் கடனைத் திருப்பிக் கொடுக்கும்படி ஒரு நாள் நெருக்கப்பட்டான். வணிகன் அப்போது தன் கையில் பொருள் இல்லாமையால் தன்னுடைய நாயையும் ஒரு பொன் கழுத்துப் பட்டிகையையும் அக்கடனுக்கு ஈடாக வைத்துவிட்டுப், பணங்கொண்டுவருவதாகத் தன் ஊருக்குப் போனான்.

பிறகு சிலநாட் சென்றன. ஒருநாள் இரவில் திருடர்கள் கடன் கொடுக்கும் அச்செட்டியாரது இல்லத்தினுள்ளே நுழைய, அது கண்ட நாய் அத்திருடர்களை நோக்கிக் குரைத்தது. திருடர்கள் அந்நாய்க்கு வேண்டிய இறைச்சி உணவினை அதன் முன்னே எறிந்தும், அஃது அவ்வுணவினை ஒரு பொருட் படுத்தாது மீண்டும் மீண்டும் குரைக்கலாயிற்று. இதற்குள் அத்திருடர் சிலர் அச்செட்டியாரது பணப்பெட்டியைத் திறந்து, அப்பொன்கழுத்துப் பட்டிகையையும் பிற நகைகளையும் எடுத்துக் கொண்டு ஓட முயன்றனர். ஆனால், அந்நாயோ அவர்களை ஓடவிடாமல் மறித்துக் குரைத்துப் பேரிரைச்சல் இட்டமையால், அவ்வீட்டவர்களும் அண்டை அயலாரும் விழித்து ஓடிவந்து அத்திருடர்களைப் பிடித்துக் கொண்டனர். அச்செட்டியாரும் தம்முடைய நகைகளை மீண்டும் பெற்றார். இதனால் மிகவும் களிப்படைந்த அச்செட்டியார் அந்நாய்

செய்த உதவியைப் பெரிதும் வியந்து, அந்நாயின் தலைவன் பட்ட கடனை விடுவித்து, அங்ஙனம் தாம் விடுவித்ததனை ஒரு துண்டுக் கடிதத்தில் வரைந்து, பின்னர் அக்கடிதத்தினை ஒரு சுருளாக்கி அதன் கழுத்திற்கட்டி, அந்நாயினையும் விடுதலை செய்தார்.

விடுபட்ட நாய் இரவெல்லாம் மகிழ்ந்தோடி வந்து விடியற்காலையில் தன் தலைவன் இருக்கும் இடத்தண்டை அடைந்தது. அதனைக் கண்ட அதன் தலைவன் "கடை கெட்டநாயே, நான் கொடுக்க வேண்டிய கடனை வந்து தீர்க்கு முன் நீ ஏன் இங்கு ஓடிவந்தாய்?" என்று சினந்து ஒரு தேங்காய் பருமன் உள்ள ஒரு கருங்கல் துண்டை எடுத்து அதன்மேல் உரமாய் வீசினான். அக்கல்லெறி பட்டதும் அந்நாய் சுருண்டு வீழ்ந்து அலறி இறந்தது.

அதன் பின் அத்தலைவன் அந்நாயின் கழுத்தில் ஒரு கடிதச் சுருள் கட்டியிருக்கக் கண்டு, அதனைப் பதைபதைப் புடன் அவிழ்த்துப் பார்க்க, அது தமக்குச் செய்த பேருதவியையும், அதனாற் கடனை விடுவித்து அந்நாயையும் விடுதலை செய்வித்த தமது மகிழ்ச்சியையும் அச்செட்டியார் எழுதியிருத்தல் நோக்கி, அவன் தன் நன்றியறிவுமிக்க நாயை ஆராயாமல் விரைந்து கொன்ற பிழையை நினைந்து நினைந்து ஆற்றாது நெஞ்சம் நெக்குருகலானான். பின்னர் அதன் நன்றியை நினைவுகூர்தற்கு அறிகுறியாகவே அதற் கொரு சிறுகோயிலும், கட்டிவைத்தான்.

# 11. ஒரு தாயின் நல்லெண்ணம்

ஊமையும் செவிடுமாயுள்ள ஒரு பெண்மகள் ஒருவனுக்கு மணஞ்செய்விக்கப்பட்டுச் சில்லாண்டுகளில் ஒரு பெண் மகவை ஈன்றாள். தான் பிறர் பேசுவதைச் செவியினாற் கேட்டுத் தெரிந்து கொள்ளுதல் கூடா விட்டாலும், பிறர் தம் வாயின் இதழ்களை அசைத்துப் பேசுவது போல் தான் பேசுதல் இயலா விட்டாலும், காதினால் கேட்பதும் வாயினால் பேசுவதும் நலஞ் சிறந்தனவாக இருக்கவேண்டுமென்றும் தனக்கு அவ்விரண்டும் இல்லாதது ஒரு பெருங்குறைபாடே என்றும் தனக்குள் எண்ணிவந்தாள். ஒருநாள் அவள் தான் ஈன்ற மகவினைத் தொட்டிலிற்கிடத்தி அதன் பக்கத்தே அமர்ந்திருக்கையில் தன்னைப்போலவே தன் பிள்ளையும் ஊமையும் செவிடு மாயிருக்குமோ, அல்லது மற்றவர்களைப் போல் பேசவும் கேட்கவும் வல்லதாய் இருக்குமோ என்று ஐயுறவுகொண்டு கவலைப்படுவாளானாள். தன்மகவு வளர்ந்து நடமாடும் போதன்றோ அது பேசவும், கேட்கவும் வல்லதென்பதை அவள் குறிப்பாக அறியக் கூடும். ஆனால், அதுவரையில் தன் மகவின் நிலையை அறியாமலிருத்தல் அவளால் இயலுமோ! மனந்துடிக்கின்றது! என் செய்வாள்! பாவம்! முடிவாக அவள் உள்ளத்தில் ஒன்று தென்பட்டது. உடனே தன் அருகில் கிடந்த ஒரு குழவிக் கல்லை எடுத்துக் கொணர்ந்து தன்மகவு உறங்கும் தொட்டிலின் பக்கத்தே நிலத்தின்கண் திடுமென எறிந்தாள். எறிந்த அக்குழவிக்கல் நிலத்தில் தாக்கி எழுப்பிய பேரோசை கேட்டு உறங்கிய மகவு திடுக்கிட்டு விழித்து வாய்திறந்து அழுதது. அக்குறிப்பினைக் கண்ட அத்தாய் தான் ஈன்ற மகவுக்கு ஓசையைக் கேட்கும் செவியுணர்வும், கேட்டு வாய்திறந்து அழுதமையால் பேசுந்தன்மையும் உண்டென்பதறிந்து மகிழ்ச்சியால் கண்ணீர் சிந்தினாள்.

## 12. ஒரு கௌதாரியும் குறவனும்

ஒருகால் ஒரு குறவன் ஒரு சிறு காட்டின்கண் வைத்த கண்ணியில் ஒரு கௌதாரிப் பறவை அகப்பட்டுக் கொண்டது. அதனை அவன் அந்தக் கண்ணியினின்றும் எடுத்துத் தன் உணவுக்காகக் கொல்லப் போகையில், அஃது அவனை நோக்கி, "ஐய என்னைக் கொல்லாமல் விட்டுவிடு! யான் உனக்கு வேலைக்காரனாயிருந்து மற்றைக் கௌதாரிப் பறவைகள் கூட்டம் கூட்டமாய் வந்து உன் வலையில் அகப் பட்டுக் கொள்ளும்படி செய்வேன்" என்றது. அது கேட்ட அக்குறவன், "நின் நண்பர்களை எல்லாம் கொன்று, நீ மட்டும் உயிரோடிருக்க எண்ணுகின்றாய்; ஆதலால், நீ விரைந்தொழியக் கடவாய்" என்று விடை பகர்ந்தான்.

## 13. ஒரு பெண்பிள்ளையும் பெட்டைக்கோழியும்

நாட்டுப்புறம் ஒன்றில் ஒரு மாது பெட்டைக் கோழி யொன்றனை வளர்த்து வந்தாள். அக்கோழி நாடோறும் ஒரு முட்டை இட்டு வந்தது. இது கண்ட அப்பெண், "எனது கோழி நாடோறும் ஒரு முட்டைதான் இடுகிறது; இனி அது நாள் ஒன்றுக்கு இரண்டு முட்டை இடும்படி செய்வேன்" என்று தனக்குள் சொல்லிக் கொண்டு பிறகு ஒவ்வொருநாளும் முன் கொடுத்ததற்குமேல் இரண்டத்தனை மடங்கு வாற்கோதுமை அதற்கு இரையாகக் கொடுக்கத் தலைப்பட்டாள். இங்ஙனம் அவள் மிகக் கொழுமையான தீனி கொடுத்துவரவே அப் பெட்டைக் கோழி தன் உடம்பினுள்ளே கொழுப்பு மிகுதியாக வரப்பெற்று ஒரு முட்டை தானும் ஈனாமல் மலடாய்ப் போயிற்று.

## 14. சுருக்கமான நல்லறிவு

விலையுயர்ந்த கொழுமையான உணவுகளையே மிகுதியாய்த் தின்றுவந்தமையால், கை காற் பிடிப்பு நோய் கொண்டு வருந்திவந்த ஒருவர் தமது நோய்க்கு மருந்து கேட்கும் பொருட்டுப், புகழ்பெற்ற மருத்துவர் ஒருவர்பாற் சென்றார். சென்று அவர்க்குத் தமது நோயின் தன்மையை எடுத்துரைக்க, அதுகேட்ட அம்மருத்துவர் "நீர் நாடோறும் ஆறு அணாவுக்கு மேற்படாத உணவு கொண்டால் அந்நோய் தீரும்" என்று மொழிந்தார்.

## 15. நரியும் சேவலும்

ஒரு கால் ஒரு நரி சேவல் ஒன்றிருக்கும் இடத்தண்டை வந்து, அதனைப் பிடித்துக் கொண்டு போவதற்குச் சூழ்ச்சி செய்தது. உடனே தன் அறிவிற்பட்டபடி அது சேவலை நோக்கி, "உன் தந்தைக்குப் பாட்டுப் பாடத் தெரிந்ததுபோல உனக்குப் பாடத் தெரியுமா என்று அறிய விரும்புகிறேன்!" என்றது. அவ்வாறு அது சொல்லியதைக் கேட்ட சேவல் உடனே தன் கண்களை மூடிக் கொண்டு கூவிப் பாடத் தொடங்கியது. அது கண்மூடிய நேரத்தில் நரி அதன் மேற்பாய்ந்து அதனைக் கௌவி எடுத்துக் கொண்டு ஓடலாயிற்று. அவ்வூரில் உள்ளவர்கள் அதனைக் கண்டு, "ஐயோ! நரி நம் சேவலைத் தூக்கிக் கொண்டு போகின்றதே!" எனக் கூவினர். அப்போது சேவல் நரியை விளித்து, "ஐய, ஊரார் சொல்வதை நீங்கள் அறியவில்லையா? தமக்கு உரிய சேவலை நீங்கள் எடுத்துச் செல்கின்றீர்கள் என்கின்றார்களே. யான் உங்களுக்கு உரியேனன்றி அவர்களுக்கு உரியேன் அல்லன் என்பதை

அவர்கட்குச் சொல்லுங்கள்" எனப் புகன்றது. அங்ஙனம் அது புகன்ற படியே நரி தன் வாயைத் திறந்து, "இஃது எனக்குரியது, உங்களுக்கு உரியதன்று" எனக் கூறவே, சேவல் நரியின் வாயினின்றுந் தப்பிப் பறந்துபோய் ஒரு மரத்தின் மேல் அமர்ந்தது. அமர்ந்து, "யான் அவர்களுக்கு உரியேனன்றி, நினக்கு உரியேன் அல்லன்" எனக் கரைந்தது. ஆகவே, நிலையறியாமற் பேசுவது பிசகென்பது இதனால் அறியப்படும்.

# 16. கல்வியும் ஓய்வும்

*கல்வி கற்பவர்களுக்கு இடையிடையே ஆறியிருத்தலும் ஓய்ந்திருத்தலும் பயன் தருவனவாகும். மக்களின் மனமானது, வளைக்கப்படாதவரையில் வலுவுடையதாய் இருக்கும் ஒரு வில்லின் தன்மையை ஒத்ததாயிருக்கின்றது என்றாலும், ஒருவன் தன் உள்ளத்தின் ஓட்டத்தை எப்போது தடுத்தாளல் வேண்டும், அல்லததனை எப்போது விடுத்தாள வேண்டும் எனப் பகுத்துணர்ந்து நடக்கின்றானோ அதுதான் அவனது உணர்வுக்குச் சிறந்த தன்மையாகும்.*

*இருவகையிலும் ஒரு கட்டுப்பட்டு நடவாமல் மிகமும் முரமாய் நடக்கும் ஓர் ஆண் மகனை யான் அறிவேன்; அவனுக்கு நடுப்பட்ட நிலைமை என்பதொன்றில்லை; தான் செய்யும் கல்விப் பயிற்சியை எப்போது விட்டுவைக்க வேண்டும், மறுபடியும் எப்போது தொடங்க வேண்டும் என்னும் அறிவும் அவனுக்கில்லை. அவன் ஏதாவதொன்றை எழுதப்புகுந்தானாயின், பகற்பொழுதோடு இராப்பொழுதினையும் ஒருங்கு சேர்த்துக் கொண்டு, தானாகவே களைத்துக் கீழ்விழும் வரையில், தன்னை நெருக்கிப் பிழிந்த படியாய்ச் சிறிதும் ஓய்வெடாது அதனைச் செய்வன். பிறகு அதனைவிட்டு வேறுமுகமாய்த் திரும்புவனாயின், எல்லா வகையான விளையாட்டுக்களிலும் அவன் ஒரு வரை துறையின்றிப் புகுந்து ஈடுபட்டிருப்பான்; மீண்டும் அவன் நூல்களைக் கையில் எடுக்கும்படி செய்வது எளிதிற் கூடுவதன்று; என்றாலும் எப்படியோ அவன் திரும்ப நூல் ஓதத் துவங்குவானாயின், அம்முயற்சியில் வரவர அழுந்தி அதனோடு உருகி ஒன்றுபட்டுப் போவான். அப்போது அவனுடைய அறிவாற்றல்கள் முற்றும் புதுக்கப்பட்டுத் தோன்றும்; தன்னளவுக்கு மிஞ்சியே தான் விழைந்ததனைச் செய்திடுவன். அங்ஙனம்*

மட்டுப்படாது செல்லுதலால், அவனது கல்விப் பயிற்சியையும் அளவுபடுத்துதல் ஏலாது.

தனக்குள்ள அறிவாற்றல்களை எவ்வாறு ஒழுங்கு படுத்தல் வேண்டும், அவற்றை எவ்வாறு அளவுபடுத்தி நடப்பித்தல் வேண்டும் என்பதனை அவன் எட்டுணையும் அறியான்; அவனது மட்டுப்படா ஆற்றல் அவனுக்கே மாறாய் நின்றது. அவன் அறிவில் வல்லவனாயிருந்த தொன்று மட்டும் அன்று; பேசுதலிலும் எழுதுதலிலும் அவனை ஒப்பாரும் மிக்காரும் எவருமேயில்லை. எனினும் அவனது கூர்த்த அறிவு வெளியே புலப்படுவதில்லை; அது புலப் படுவது ஒரு குற்றமாக அவனது பகுத்தறிவுக்குத் தோன் றியது; ஏனென்றால், ஒளிக்கப்பட்டதைவிட ஒளிந்திருப்பதே தீங்கு பயப்பது. அவன் தான் பேசும் மொழிகளை உழைப் பெடுத்துப் பேசுவதில்லை. கட்டாயமாக இருந்தால் அல்லாமல், அல்லது ஏதேனும் ஊதியம் வருவதாய்க் காணப் பட்டால் அல்லாமல், அவன்தான் வழக்கமாய்ப் பேசும் பெரும்பாட்டையை விட்டுப் பிசகிப் போவதில்லை. எதனாலெனின், தான் பேசும் பொருளை விளக்குதற்குத் துணையாயின் அல்லது, வெறும் வனப்புக்காக உவமை உருவகங்களைக் காட்டிச் சொல்லுதல் ஆகாதென்பது அவன் கருத்து. ஒழுங்காக இருக்கவேண்டுவதொன்றனைத் திரிபு செய்தலும் பிணித்தலும் அளவுக்கு மிஞ்சி வெறிபிடித்தவர் தம்செய்கையேயாமென்று அவன் எண்ணினான்.

## 17. வறுமை

*"வறுமையானது தகாத செயல்களைச் செய்யும்படி மக்களை ஏவுகின்றது; ஆயினும், நேர்மையுள்ளவர்கள் அத்தகைய செயல்களைச் செய்தல் ஆகாது. வறுமை வந்த காலத்திலேதான் அவர்கள் தமது மனநிலையை உரப் படுத்துதல் வேண்டும். ஒருவன் பசித்து வருந்தினாலும் பிறரைச் சார்ந்து பிழைத்தல் தக்கதன்று."*

## 18. வாழ்க்கையே நாடகம்

*"நமது உயிர்வாழ்க்கை முழுதும் ஒரு நாடகமே எனக் கருதுகிறேன். அதில் ஒவ்வொருவனும் தன்னை மறந்து பிறன் ஒருவனைப் போல் நடக்கப் பாடுபடுகின்றான். நாம் நம் முடைய உண்மை நிலைக்குத் திரும்பமாட்டாதவர்களாய்ப் பிறரைப் பார்த்து அவர்களைப் போல் நடப்பதிலேயே உறைத்து நிற்கின்றோம். இஃது எதனை ஒத்திருக்கிறதென்றால், இளஞ்சிறார் தெற்றுவாய் உடைய சிலரைப் பார்த்து, அவரைப் போல் தாமும் தெற்றித் தெற்றிப் பேசுதலையே ஒத்திருக் கின்றது. அங்ஙனம் அச்சிறுவர் தெற்றித் தெற்றி நெடுகப் பேசிவரவே, சிறிது காலத்தில் அவர்களும் தெற்றுவாய் உடையராகின்றனர். முதலிற் பழகிய அத்தீயபழக்கம் பின்னர் எக்காலும் மறக்கப்படாத வேறோர் இயற்கையாய் விடுகின்றது" என்று நாடக நூலாசிரியரொருவர்* (Ven Jonson) *அறிவுரை புகல்கின்றார்.*

## 19. ஒரு கிண்ணம் தண்ணீர்

முதலில் ஆடுமேய்க்கும் இடையனாயிருந்து பின்னர்க் கடவுளின் திருவருளால் அரசியல் நிலைக்கு உயர்த்தப் பட்டுச் செங்கோல் செலுத்திய பண்டைக்காலத்து மன்னன் ஒருவன் (David) தன்மேற் பகைகொண்ட வேறொரு கொடுங்கோல் மன்னனாலும் நாகரிகமில்லாக் கொடிய கூட்டத்தாராலும் இருபக்கமும் துன்புறுத்தப்பட்டு, அதனால் தனது அரச வாழ்க்கையைத் துறந்து, தன் அருமைப் பெற்றோர்களைப் பாதுகாவலான ஓரிடத்திற் கொண்டு போய் வைத்துத் தான் மேய்ப்பனாயிருந்தபோது, அறிந்திருந்த ஒரு சுக்கான் கல்மலைப்பாங்கு சென்று அங்குள்ள குகைகளையே தனக்கு உறைவிடமாய்க் கொண்டிருந்தான். கடவுளின் அருளுக்கு உரியனான இம்மன்னன் இங்ஙனம் ஏழ்மை நிலையை அடைந் தானாயினும், அவனது தெய்வத் தன்மையானது அவன்றன் படைவீரர் பலரை அவன்பால் வருவித்தது; மனத்துயர் கொண்டோரும், கடன்பட்டு நொந்தோரும், மனக்குறை யுடையோரும் அவன்பால் இருத்தலை விரும்பி அவனிடம் வந்து குழுமினர்; இவர்களுட் சிலர் படைஞராய் இருந்த காலத்து வென்றியில் சிறந்து முதன்மை பெற்று விளங்கி னோராவர். இவர்கள் எல்லாரும் தம் இளைய மேய்ப்ப மன்னன் சொல்வழி நடப்பவராய், எவர்க்கும் எந்த வகையிலும் தீங்கு செய்யாது ஒழுகினோராவர். அவ்விளைய மன்னனோ மிடிப்பட்ட இந்நிலையிலும் இறைவனை மறவாத வனாய்த் தனது யாழையியக்கிப் பல அருட் செம்பாடல்களை உளங்கரைந்து பாடும் வழக்கம் மேற்கொண்டான். அன்பும் அருளும் ததும்பும் அவ்விசைப்பாட்டுகளைக் கேட்ட அப்படை வீரர்களெல்லாரும் தமது வறுமையையும் துன்பத்தையும் மறந்து, கடவுள்பாற் கசிந்த உள்ளத்தினராகித் தம் மன்னன்பால் நிலைபெற்ற பேரன்புடையரானார்.

இம்மன்னனும் இவன்தன் படைஞரும் அடைக்கலம் புகுந்த அவ்வெறுமலைப்பாங்கு கதிரவன் வெப்பத்தால் அழற்சி மிக்கதாயிருந்தது. அம்மலை முகட்டினூடு இருந்த ஒரு பெரும் பிளவின் அடியிடமெல்லாம் உடைந்த கற்பாறைத் துண்டுகள் இறைந்து கிடந்தன. அதன் இருபுறத்தும் செங்குத் தாய் நின்ற சுற்றுச் சுவர்களின் கரை ஓரத்தில் மலையாடுகள் அடிவைப்ப தற்கும் போதுமான இடம் கிடையாது. இத் தன்மைத்தாகிய மலைப் பிளவின் கண் உள்ள ஒரு செங்குத்தான குன்றின் உச்சியிலேதான் அவ்விளைய மன்னன் புகலிடமாய்க் கொண்ட ஒரு கொடுமுடி இன்றும் காணப்படுகிறது. அதன் குறுகிய வாயினுள்ளே நுழைந்து சென்றால், படியடுக்குகள் உடைய குகையொன்று சிறுகிய வழிகளும் பெருகிய மண்டபங்களும் மாறிமாறி வாய்ந்தனவாய் அமைந்திருத்தல் காணப்படும். என்றாலும், அவ்விடம் நெருக்கமாய் வெப்பம் மிக்கு இருந்தது. ஒரு செடிதானும், மரந்தானும் இல்லாமல், ஆள்வழக்கம் அற்றுப் பாழாய் வெய்தென நிற்கும் அவ்விடத்தைத் தனக்குப் புகலிடமாய்க் கொண்ட அவ்இளைய மன்னன், தான் முன்னே அரசாண்ட இனிய செழுமையான நாட்டையும், அதன்கண் ஆங்காங்குப் பச்சைப் பசேலென வளர்ந்திருக்கும் கோதுமைப் பயிர் களையும், சன்னல் பின்னலாய்ப் படர்ந்திருக்கும் கொடி முந்திரிக் கொடி களையும், குளிர்ந்த தீஞ்சுவைத் தண்ணீர் சுரந்து ஒழுகப் பெறும் வாவிகளையும், அவ்வாவிகளின் நீர்பாய் மடைகளின் பாங்கரிருந்து தான் முன்னர் இறைவன் மேல் இசைப்பாட்டுகள் மிழற்றின வகைகள் எல்லாம் நினைந்து பெருமூச்செறிந்தான்! எறிந்து "ஐயோ! யான் இருந்து இசைமிழற்றின அந்நீர் நிலையிலிருந்து ஒரு கிண்ணம் தண்ணீர் எவரேனும் எனக்குக் கொணர்ந்து கொடார்களா!" என்று ஆற்றாது கூறினான்.

அச்சொற்கேட்ட அவன்றன் படைஞரில் மூவர் தம் மன்னனது வேட்கையை நிறைவேற்றத் தீர்மானித்தனர். அவர்கள் புகலிடமாய்க் கொண்ட அம்மலையரணுக்கும், அரசன் அத்துணை ஆவலொடு வேண்டிய நீரினையுடைய வாவிக்கும் இடையே அவர்க்குப் பெரிதும் தீங்கிழைத்த கொடிய காடவர் கூட்டம் படை கொண்டிருந்தது. என்றாலும், தம் தலைவன் மேல் அவர்கள் வைத்த பேரன்பானது அப்பகைவர்

கூட்டத்திற்கு அஞ்சுமா! உடனே அம்மூவரும் தாமிருந்த உச்சிமலைப் பிளவினை விட்டுக் கீழிறங்கினர். எப்படியோ அவர்கள் அப்பகைவர்தம் படையினூடே சென்று, தம்மரசற்கு விருப்பமான நீரூற்றிலிருந்து நீரை முகந்தெடுத்து, அதனைச் சுமந்த வண்ணமாய் அப்பகைவர் படையினூடே தானே திரும்பிப் போந்து, தமது மலையுச்சியின் கொடுமுடியில் அதனைக் கொணர்ந்து சேர்ப்பித்தனர். தம் தலைவனது வேட்கையை ஆற்றும் பொருட்டுத் தம்முயிரையும் பொருட் படுத்தாது பகைவரூடு சென்று அவர்கள் அந்நீரினைக் கொணர்ந்த செயற்கருஞ் செயலை நோக்கவே, அம்மேய்ப்ப அரசனது நெஞ்சம் நெக்குருகலாயிற்று. அத்துணை அரிதிற் போந்த அந்நீர் மிகவும் புனிதமானதென்றும், அதனைத்தான் பயன்படுத்திக் கொள்ளுதல் தகாதென்றும் அவன் எண்ணினான். எண்ணி அந்நீரினை எடுத்து இறைவன் அருட்குறி மேற் சொரிந்து, தன் பேரன்பிற்கு அறிகுறியான கண்ணீரும் வார்ந்தொழுகிப் பேரின்ப வெள்ளத்தில் படிந்திருந் தான் என்பது.

# 20. ஒரு பொன் மீன்

பேரன்பினனான அவ் இளைய மன்னன் நம் தமிழ் நாட்டுக்கு அயலதான மேல்நாட்டில் இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் இருந்தவன் ஆவன். அவனை யொப்ப இறைவன் பாற் பேரன்பு பூண்டு ஒழுகினோர் இத்தமிழ் நாட்டகத்தும் பலர் பழங்காலத்திருந்தனர். அவருள் ஒருவர் செய்த செயற்கருஞ் செயலை ஈண்டு எடுத்துக்காட்டுவாம். சோழ வேந்தர்களின் தலைநகரங்களில் ஒன்றான நாகபட்டினம் என்பது கடற்கரையை அடுத்துள்ளது. அந்நகரத்தின் கடற் கரையோரத்தின்கண் உளதாகிய செம்படவர் குப்பத்தில், இன்றைக்கு ஓராயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன் செம்படவர் தலைவனான ஒருவர் எல்லாம் வல்ல இறைவன் பால் அளவிறந்த அன்புடையராய் உயிர்வாழ்ந்து வந்தனர். அவர் தம் ஏவல்வழி நிற்கும் செம்படவர்களை எல்லாம் கடல் மேல் கட்டுமரங்களில் செலுத்திக் கொண்டு சென்று, வலைவீசுவித்துப் பிடிப்பிக்கும் மீன்குவைகளை விற்றுப், பெற்ற பொருளைத் தம்மவரும் தாமுமாகப் பங்கிட்டுச் செல்வம் உடையராயிருந்தனர்.

இவர் மீன் பிடிக்கும் வாழ்க்கையில் இருந்தனராயினும், எல்லாம் வல்ல இறைவன் நிலையினை உணர்ந்து, அவன் திருவடிக்கண் அழுந்தின அன்பு வாய்ந்தவர். ஆகவே, தம் மவர் பிடித்துக் கொணரும் மீன் தொகுதியுள் ஒரு தலை மீனையெடுத்து அஃது இறைவனுக்குரியதென நினைத்து, அதனைக் கடல்நீரில் மீண்டும் செல்கவென விட்டுவருதலை நாடோறும் மாறாமல் செய்து வந்தார்.

இங்ஙனம் செய்து வருகையில், ஏது காரணத்தாலோ மீன்கள் மிகுதியாய் அகப்படாமல் செம்படவர் தமது வலை வளம் சுருங்கிப் பட்டினியும், பசியுமாகக் கிடந்து துன்

புறலாயினர். அங்ஙனம் தம்மவர் துன்புறுங்காலத்தும், அவர்தம் தலைவரான அன்பர் முதல் வலையில் ஒரு மீனே அகப்பட்டாலும், அஃது இறைவற்கே உரியதென அன்பொடு நினைந்து, அதனைக் கடலின்கண் உயிரொடு விடுத்து வந்தார். நாளேற நாளேற இவரது செல்வமும் சுருங்கிவிட, இவர் உடல் தளர்ந்து வருந்தினாலும், மனம் சிறிதும் தளராராய் மகிழ்ந்து, முதலில் அகப்படும் ஒரு மீனையும் ஒவ்வொரு நாளும் கடலின்கண் உய்த்தலில் சிறிதும் வழுவாது ஒழுகலாயினர். கடைமுறையாக வீசுவித்த பல வலைகளுள் ஒரு வலையிற்பட்ட ஒரு மீனைத் தவிர, வேறொரு சிறு மீன் தானும் வேறு வலைகளுள் அகப்பட்டிலது. எனினும், ஒரு வலையில் அகப்பட்ட அவ்வொரு மீனையும் அவர் மிக்கதொரு களிப்புடன் எடுத்துப் பார்க்க, அஃது ஒரு பெரிய தேயத்தையே விலைகொளத்தக்க சுடர்விரி பசும்பொன் வடிவினதாய்த் திகழ்ந்தது.

அப்பொன்மீன் அகப்பட்ட நேரம் எத்தகைய மன வுறுதியுடையார் மன நிலையினையும் கலைக்கும் வலிமை வாய்ந்தது. செம்படவர் தலைவனான அவ் அன்பரோ மிகவும் மிடிபட்டுத் தம் குடும்பத்தவரோடு பல நாட்கள் பட்டினியும், பசியுமாய்க் கிடந்து இடருழந்து வருகின்றார். தம்முடைய துன்பத்தை ஒரு பொருட்டாகக் கருதாது, தமது ஆளுகைக் கீழுள்ள செம்படவர் படும் துயரத்தைக் கருதும் அருள் மாட்சியுடையராகலான் அவர் பொருட்டாகவாவது அப்பொன்மீனை விலை செய்து, அவர் அச்செமபடவரது மிடிவாழ்க்கையை மாற்றப் பாலார். மற்று, அச்செம்படவர் களோ தாங்குதற்கரிய தமது வறிய நிலையினைக் கருதித் தம் தலைவன் இப்போதாயினும் இவ்வொரு மீனை விற்றுத் தம்மைப் பாதுகாப்பரோ, அன்றி என்றும்போல இதனையும் கடற்கண் விடுத்திடுவரோ என்னும் ஐயத்தால் ஏங்கிய நிலை யினராய், அவர் இனிச் செய்யப் போவதனை எதிர்பார்த்துக் கண் இமையாது நிற்கின்றனர். அப்பொன் மீனைக் கையிலெடுத்த சில்லிமைப் போழ்தில் எத்தனையோ பல எண்ணங்கள் மின்னொளியினும் கடுகி அவர்தம் தலைவன் உள்ளத்தை ஊடுருவிச் சென்றன. "என் கீழ்க்குடிகளான இச்செம்படவர் எத்தனையோ பல நாட்களாக வலைவளந் தப்பிப் பட்டினியும், பசியுமாய்க் கிடந்து வருகின்றார்கள்!

என்கொள்கை தவறாமல், நாடோறும் அகப்படும் ஒரு மீனையும் இறைவற்கென்று கடலின்கண் யான் விடுத்து வருதலைக் கண்டும் என்னை வெறுத்திலர்! இவ்வொரு மீன் விலையால் இவர்கள் எல்லாரின் மிடியும் அற்றுப்போவது திண்ணமே. ஆனாலும், இஃது இறைவற்கு உரியதன்றோ? இதனை விற்றற்கும், இவர்களைப் பாதுகாத்தற்கும் யான் யார்? யான் பிறக்கும் முன்னும் யான் இறந்த பிறகும் இவர்களைப் பாதுகாத்தவர், பாதுகாப்பவர் கடவுளா? யானா? என் மனைவி மக்கள் பெற்றார் உற்றாரெல்லாம் என்கீழ்க் குடிகளைப் போல் அல்லர்; முற்றும் என்னைச் சார்ந்து பிழைப்பவர். இவர்கள் பொருட்டு இதனை விற்றல் இறைவன் திருவுளத்திற்கு இசையுமா? கண்ணெதிரே என் உதவியைப் பெரிது வேண்டி நிற்கும் இவர்கட்கென்று இதனைப் பயன்படுத்தாமல் கட்புலனாகாக் கடவுட்கென்று இதனைக் கடலின்கண் விடுத்தல் பயன் தருமா? இத்தனை நாளாக மிடிப்பட்டு வருந்தும் இவர்கள் அனைவரின் நிலையையும் ஓராமலே இறைவற்கென்று அரிது அகப்பட்ட ஒரு மீனையும் விடுத்து வந்த யான் இன்றைக்கு மட்டும் இப்பொன்மீனைக் கண்டு பேரவாக் கொண்டு இறைவனை மறந்து இவர்களை நினைதல் பிழையன்றோ? இவர்கள் துயர் ஒருபுறம் இருக்க, எனக்கு அரிதிற் கிடைத்த இம்மக்கள் யாக்கை இறைவன் தந்ததன்றோ? இதனைப் பாதுகாவாது, யான் ஏதோ விடாப்பிடியாக் கொண்ட ஒரு கொள்கைக்காக மிடியால் இதனை அழித்து விடுதல் ஐயன் அருளுளத்திற்கு அடுக்குமா? எனக்கும் என்னைச் சேர்ந்தார்க்கும் என்கீழ்க்குடிகட்கும் பிறர்க்குமெல்லாம் வந்த இத்தீரா வறுமையினை இவ்வொரு பொன் மீன் தீர்த்து எல்லாரையும் இன்பவாழ்வில் வைக்குமென்றால், இதனைக் கடலின்கட் போக்குதல் தக்கதாமா? நல்லது, இவ்வெல்லார் வறுமையையும் தீர்த்து, அவர்கள் எல்லாரையும் பாதுகாத்தல் வேண்டி, என்கொள்கைக்கு மாறாக இப்பொன்மீனை விற்கத் துணிவேனாயின், இதனை விற்கப் போம்போதோ, விற்றுப் பொருளொடு திரும்பும் போதோ, திரும்பி எல்லார் வறுமையும் தீர்க்கும்போதோ, அது தீர்ந்து எல்லாரும் களித்திருக்கும் போதோ ஒரு கடும் புயற்காற்றும் விடாப்

பெருமழையும் கதுமெனத் தோன்றி, எமது மணற்குப்பத்தை வாரிக் கரைத்துக் கொண்டு போய்க் கடலின்கண் எம்மை அடங்க அமிழ்த்தி அழித்தால், அவரும் யானும் என் செய்யக் கூடும்! அல்லது இக்கடல் நீரே காற்றாலும், மழையாலும் வரை கடந்து பொங்கி எழுந்து போந்து எம்மையெல்லாம் ஒருங்கே அழித்துச் சென்றால், யான் என்னைக் காப்பதும் எம் உறவினர் சுற்றத்தாரைக் காப்பதும் எங்ஙனம் கைகூடும்! எல்லா மக்களையும், மக்களினும் தாழ்ந்த எல்லா உயிர்களையும் எவன் படைத்தானோ, அவனே அவர்களையும் அவைகளையும் காத்தற்கும் அழித்தற்கும் உரியவன். எல்லா உயிர்களையும் காத்தற்கு ஏற்ற பேராற்றல் எம் ஆண்டவன் ஒருவனுக்கு இருக்கப் பிற உயிர்களின் உதவியும் துணையும் இன்றிப், பிறபொருள்களின் சேர்க்கையும் பயனுமின்றி என்னையே காத்துக்கொள்ள மாட்டாத யான், என்னவரைக் காக்கும் கடமையுடையேன் எனப் பிழைபட எண்ணி, எல்லாம் வல்ல எம்பெருமானுக்கு இத்தனை காலமாகச் செய்துவந்த செயலினின்று இப்போது மாறப் பெறுவேனோ!" எனத் தொடர்பாக நினைந்தொரு முடிவுக்கு வந்தவுடனே, "என்றும் போல இன்றும் இப்பொன்மீன் எல்லாம் வல்ல பெருமான் திருவடிக்கே உரித்தாகற்பாலது!" என நெஞ்சம் குழைய மொழிந்து, அதனைக் கடலின்கண் விடுத்திட்டார்.

## 21. நீண்டகாலக் கடன்

*நூலாசிரியர் ஒருவரை ஒருநாள் ஓர் இரவலன் எதிர்ப் பட்டனன். உடனே அவன் தனக்குக் கால்ரூபா உதவி செய்யும்படி அவரை விடாப்பிடியாய்க் கெஞ்சிக் கேட்டு நெருக்கினான். அவர் தமது சட்டைப் பையினுட் கையை நுழைத்துத் தடவ, அதன்கட் சில்லறையில்லாமல் ஒரு முழு அரை ரூபா மட்டும் இருக்கக் கண்டார். அவர் அதனை எடுத்து அவ்விரவலனுக்குக் கொடுத்து "நீ எனக்கு மிச்சங்கால் ரூபா கடன் கொடுக்கவேண்டியிருப்பதை மறவாதே." என்று கூறிப் புன்னகை புரிந்தார். அதற்கு அவன் "அப்படியே, பெருமானே, யான் அக்கடனைத் தங்கட்குத் திருப்பிக் கொடுக்கும் வரையில் உயிரோடிருப்பீர்களாக!" என்று மறுமொழி நுவன்று சென்றான்.*

## 22. ஞாயிறும் திங்களும்

*ஒருகால் நண்பர் இருவர் ஞாயிறு (சூரியன்), திங்கள் (சந்திரன்) என்னும் இரண்டில் எது பயன்மிகவுடையது என வழக்கிடலாயினர். முடிவாக அவ்விருவரில் ஒருவர், "ஓ! எனக்கு அது தெரியும். திங்களானது ஞாயிற்றினும் இரு மடங்கு பயன் உடையது; ஏனென்றால், அது தனது விளக்கத்தை எல்லாரும் வேண்டும் இராக்காலத்தே ஒளிவீசுகின்றது; மற்று, ஞாயிறோ தன்னை எவரும் வேண்டாத பகற்காலத்தில் ஒளிர்கின்ற தன்றோ!" என்றான்.*

## 23. உதவிச்சம்பளங் கேட்டல்

தன் அரசனுக்காக உற்ற நேரத்தில் போர்புரிந்து வெற்றி பெற்ற அஞ்சா ஆண்மையனான படைஞன் ஒருவன், தனக்கு உதவிச் சம்பளம் அளிக்கும்படி கேட்கத் தன் அரசன்பால் போந்தனன். போந்து அரசற்குத் தன் வேண்டுகோளைத் தெரிவிக்க, அரசன் "நல்லது பார்ப்போம்" என்றான். உடனே அம்மறவன், "அதற்காகத் தேவரீர் காக்கவேண்டுவதில்லை, தாங்கள் இப்போதே பார்க்கலாம்" என்று சொல்லி, உடனே தன் உடம்பின்மேல் அணிந்திருந்த சட்டையைக் கழற்றி விட்டுப், போர்த்தழும்புகள் நிறைந்த தன் மார்பினைக் காட்டினான். அதனை அரசன் கண்டதும் "இனிப் பார்க்கலாம்" என்று சொல்ல மாட்டானாய், உடனே அவற்கு உதவிச் சம்பளம் கொடுக்குமாறு கட்டளையிட்டான்.

# 24. ஒரு மீகாமனது கனவு

"கனவு காண் காலத்தும் பிறர்க்குதவிசெய்வதே அழகிது, நல்லது" என்றார் மேனாட்டு நாடக நூலாசிரியர் ஒருவர். ஒருகால் ஒரு சிறந்த மீகாமன் தனது கப்பலில் தன் அறையினுள்ளே படுத்து உறங்கிக் கொண்டிருந்தான். அவனது மரக்கலம் அப்போது சென்று கொண்டிருந்த "நடுநிலக் கடல்" அமைதியாகவே இருந்தது; வானத்திலும் மப்பு இல்லை. ஆனால் உறங்கிக் கொண்டிருந்த அக்கப்பல் தலைவனோ தனது கப்பல் கடலுள் அமிழ்வதாகக் கனவு கண்டு, அக்கனவு நிலையிலேயே அறையைவிட்டு வெளியே நடந்து வந்து, சுக்கான் திருப்புவோன் வேலையைக் கைக்கொண்டு தன் கப்பலாட்களை யெல்லாம் விழிப்பாய் இருக்கும்படி கூவினான்; தூக்கத்திலிருந்த வாறே தம் தலைவன் செய்யும் செயல்களைக் கண்டு இறும்பூதுற்ற அவ்ஆட்களெல்லாரும் நகையாடினர்; அவர்தம் நகையொலியைக் கேட்டு விழித்துக் கொண்ட அம்மீகாமன் மீண்டும் தன் அறைக்குட் சென்று மனக் கலக்கத்துடனேயே தூங்கலாயினன். அங்ஙனம் தூங்கிய சிறிதுநேரத்தின் பின் திரும்பவும் அவன் விழித்தெழுந்து பார்க்கப், புயற்காற்று அறிவிக்கும் கருவி, வரப்போகும் சூறாவளியினை அறிவித்தது. உடனே அவன் மேல் தட்டின் மேலோடித் தன் ஆட்களை கூவியழைத்தனன். சுக்கான் திருப்பிக் கொண்டிருந்த ஆடவன் "ஐய, மறுபடியும் கனவோ?" என வினவினான். என்றாலும், அவன்றன் ஆட்கள் அவன் சொற்படியே சென்று அக்கப்பலின் பாய்களை உடனே சுருக்கிக் கட்டினர். சிறிது நேரத்திற்கெல்லாம் ஒரு பெருஞ்சூறைக் காற்று வந்து வீசியது. ஆயினும், பாய்கள் மடக்கிக் கட்டப் பெற்றமையால் இக்கப்பல் ஏதோர் இடருமின்றிச் சென்றது; முன்னதாகவே பாய் மடக்கிக் கட்டப்பெறாத மற்றக் கப்பல்களோ, அப்பெருங்காற்றினால் அலைக்கப்பட்டுக் கடலுள் அமிழ்ந்து போயின. கனவிலும் தன் கடமையைச் செலுத்திய தம் தலைவனுக்கு அக்கப்பலாட்கள் எல்லாரும் நன்றி செலுத்தினர்.

## 25. ஒரு கடல் மனிதன்

*1725-ம் ஆண்டு ஒரு கப்பல் மேல்கடலில் நூற்றெண்ப தடி ஆழமுள்ள ஒரு பகுதியில் ஓடிக் கொண்டிருக்கையில் காலை பத்துமணிக்கு மக்கள் வடிவம் வாய்ந்த ஒருவன் அக்கடல் நீரினின்றும் மேலெழுந்து அக்கப்பலின் இடப்பக்கத்தே காணப்பட்டனன். அவனைக் கண்ட அக்கப்பல் தலைவன் உடனே அவனை மேலே தூக்கிக் கப்பலிற் சேர்த்தற் பொருட்டு ஒரு கொளுக்கியை எடுத்தான். அது கண்ட அக்கப்பல் மீகாமன், அத்தலைவனைத் தடுத்து "அவன் உண்மையான மனிதன் அல்லன். கடல்நீரில் உயிர்வாழும் மனிதனாவான்; அவனை நீங்கள் மேலிழுக்க முயன்றால், அவன் உங்களைக் கீழ் இழுத்து விடுவன்" என்றான். அதுகேட்ட தலைவன், அக்கடல் மனிதனின் வடிவம் முழுமையும் பார்க்க வேண்டி ஒரு சிறுகோலை எடுத்து அவனது முதுகின்மேல் எறிந்தான். எறிந்தகோல் தன்மேல்படவே அவன் சினங் கொண்டான் போல் தன் இருகைகளையும் மடித்துக் கொண்டு தன் முகத்தைக் காட்டினான். அதன்பிறகு அவன் அக்கப்பலைச் சுற்றிச் சென்று அதன் பின்னணியத்திலுள்ள சுக்கானைத் தன் இரு கைகளாலும் இறுகப் பற்றிக் கொண்டான். அதுகண்ட அக்கப்பல் ஆட்கள், அவன் அச்சுக்கானைப் பழுது படுத்தி விடுவன் என்று அஞ்சி அதனை இறுக்கி வைக்க வேண்டியவர்களானார்கள். பின்னர் அக்கடல் மகன் அங் கிருந்து, மக்கள் நீந்துதல் போலவே நீந்திக்கொண்டு கப்பலின் முன்பக்கத்திற் போய், அதன் முன்னணியத்தில் நிறுத்தப் பட்டிருந்த ஓர் அழகிய பெண்ணுருவைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். அப்பால் அவன் அப் பெண்ணுருவைப் பற்றிக் கொள்ள விழைந்தான்போற் கடல்நீரினின்றும் மேல் கிளம்பினான். இவ்வளவும் அக்கப்பலில் இருந்தார் எல்லார் கண்ணுக்கும் எதிரே நிகழ்ந்தன.*

திரும்பவும் அந்நீர்மகன் அக்கப்பலின் இடப்பக்கமாய்ப் போந்தனன். கப்பல் மேலிருந்தவர் ஒரு கயிற்றில் ஒரு கடல் மீனைக் கட்டி அதனை அவன் முன்னே தொங்க விட்டனர். அவன் அதனைப் பிடித்துப் பார்த்தனனேயன்றி வேறொன்னும் செய்திலன். பின்னர் அவன் அதனைவிட்டு நீந்திப் போய் அம்மரக்கலத்தின் பின்னணியத்திற்கு வந்தான்; வந்து மறுபடியும் சுக்கானைப் பற்றிக் கொண்டனன். அதுகண்ட மீகாமன் ஓர் இருப்பு வல்லயத்தை எடுத்து அதனை அவன் மீதெறிந்து அவனைக் கொல்லுதற்கு முனைந்தான். ஆனால், அவ்வல்லயமோ அக்கப்பல் கயிறுகளிடையே சிக்கிக் கொண்டமையால், அக்கடல் மகனது முதுகில் பட்டதேயன்றி அஃது அவனை ஊறுபடுத்தவில்லை; தன் முதுகிற்பட்டதும் அவன் திரும்பி முன்போலவே தனது முகத்தைக் காட்டினான். அதன்பிறகு, அவன் மறித்தும் முன்னணியத்திற்குப் போந்து அங்கு நிறுத்தப்பட்டிருந்த பெண்பாவையை உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தான். அதன்மேல் மீகாமனின் துணைவன் அவன் மேலெறிவதற்கு அவ்வல்லயத்தை எடுத்து வருகவென்று கூவினான். ஆனால், முன்னொருகால் அதே கடல் வழியில் அதே மரக்கலத்தில் மேலேறிப் போந்து தன்னைத் தானாகவே மடித்துக் கடலில் எறியப்பட்ட புதுமையான ஓர் உயிராய் அவன் இருக்கலாமோ என ஐயுற்று அஞ்சி, அத்துணைவன் அவ்வல்லயத்தால் அவனைக் கொல்லாமல், அதனால் மெல்ல அவனை முதுகிற் குத்தித் தள்ளினான். அங்ஙனம் குத்தவே, அக்கடல்மகன் முன்போலவே தன் முகத்தைச் சினந்து காட்டி, அக்கப்பலின் மேல் தட்டு வரையில் ஏறிவந்தான். வந்தவன் கப்பலாட்களில் இருவர் பிடித்திருந்த கயிறு ஒன்றைத் தானும் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டான். அவ்விருவரும் அக்கயிற்றை அவன் கையினின்றும் வலிந்து இழுக்கவே, அந்நீர்மகனும் அக்கயிற்றொடு கூடவே கப்பலின் மேல் தட்டிற்கு இழுக்கப்பட்டனன். ஆனால், மேல்தட்டிற்கு வந்தவுடனே அவன் உடனே கடலில் குதித்துத் தொலைவில் நீந்திப் போயினன். மீண்டும் சிறிது நேரத்தில் அக்கடல்மகன் நீந்திக் கொண்டு கப்பலருகில் வந்தான். இப்போது அவன் தண்ணீருக்குமேல் கொப்பூழ் வரையில் உயர எழுந்தமையால், அம்மரக் கலத்திலிருந்தவர்கள் அவனது உடம்பின் மேற்பகுதியை நன்கு பார்க்கக்

கூடியவர்களானார்கள். அவனது மார்பு சிறந்த ஒரு பெண்மகளின் மார்புபோற் பெரிதாய் அழகிய தாய் இருந்தது. ஆனால் அவன் முதுகைத் திருப்பிய போது ஆண்மகனாகவே காணப்பட்டான். அதன் பின்னர் அவன் அக்கப்பலைச் சுற்றி நீந்தி மறைந்து போய்விட்டான். அதற்குப் பிறகு அக்கப்பலி லுள்ளவர்கள் அவனைப் பார்க்கவில்லை.

காலை பத்து மணியிலிருந்து பன்னிரண்டு மணி வரையில் அக்கடல்மகன் அம்மரக்கலத்துடனேயே வந்தனன். அம்மரக்கலத்திருந்தவர்கள் அவனைக் கண்டு அச்சமுறா திருந்தால், அவனைக் கப்பலின் மேல்தட்டுமேற் பலகாலும் ஏற்றியிருக்கலாம். அவனதுடம்பின் நீளம் ஏறக்குறைய எட்டடி; தோலின் நிறம் பழுப்பு; அத்தோலின் மேற்செதிள் ஏதும் இல்லை; அவனுடைய நடையெல்லாம் மக்கள் நடைகளையே ஒத்திருந்தன; கண்கள் இருக்கவேண்டிய அளவுப்படியே அமைந்திருந்தன; வாய் சிறு அளவினது; மூக்குப் பெரிதாயும் தட்டையாயும் இருந்தது; பற்கள் மிகவும் வெண்மையாய்த் தோன்றின; மயிர் கறுப்பு; மோவாயிற் பாசிபடர்ந்தாற்போல் மயிர்கள் இருந்தன; மூக்கின் கீழ் ஒருவகையான மீசை; காதுகள் மக்களின் காதுகளைப் போலவே காணப்பட்டன; ஆனால், அவனுடைய கைவிரல் கால்விரல்களுக்கு இடையில் மட்டும் தாராப் பறவைகளுக்குள்ளது போல் செலு இருந்தது. சுருங்கச் சொல்லுங்கால் அவன் திருத்தமான அமைப்பு வாய்ந்த ஓர் ஆண்மகனாகவே காணப்பட்டான். இங்ஙனங் காணப்பட்ட அக்கடல் மகனைப் பற்றிய செய்தி முற்றும் உண்மையென்று அக்கப்பல் தலைவனும் மீகாமனும் அதில் வேலைசெய்த முப்பத்திரண்டு ஆட்களும் உறுதிமொழி புகன்றார்கள்.

## 26. உற்றுநோக்கி ஆராய்தல்

*உலகத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகள் சிறியவாய் இருப்பினும் பெரியவாய் இருப்பினும், அவைதம்மை உற்றுநோக்கி ஆராய்ந்தவர்களே அறிவில் பெரியராகிப், பல அரும்பெரும் புதுமைகளைக் கண்டறிந்து, நம்மனோர்க்கெல்லாம் அளப்பிலா நன்மைகளைச் செய்திருக்கின்றார்கள். எதனையும் உற்றுநோக்கி ஆராய்தலின்றி, ஆடு மாடுகளைப் போல் பொதுநோக்காய்ச் சென்றவர்கள் தாமும் அறிவு விளங்கப் பெற்றதில்லை; பிறர்க்கும் நன்மையாவன செய்ததில்லை. சோற்றுக்குக் கேடும், மண்ணுக்குப் பொறையுமாய் இருந்து அவர்கள் தம் வாழ்நாளை உண்டு உடுத்து உறங்கிக் கழித்தவர்களேயாவர். இலந்தை மரத்திலிருந்து நன்றாய்ப் பழுத்த பழங்கள் உதிர்ந்து கீழ் விழுவதனை எத்தனைகோடி மக்கள் முற்காலத்தும், பிற்காலத்தும் பார்த்திருக்கின்றார்கள்! அவர்களுள் எத்தனை பேர் அவைகள் ஏன் அங்ஙனம் கீழ் விழுகின்றன என்று ஆராய்ந்து பார்த்தவர்கள்? நியூட்டன் என்னும் ஒருவரைத் தவிர ஏனைக் கோடியான மக்கள் எவரும் அதன் உண்மையை அறியவில்லையே! ஏன்? உற்றுநோக்கி ஆய்ந்துபார்க்கும் அறிவும் முயற்சியும் அவரைத் தவிர மற்றையோர்க்கு இல்லாது போனமையாலன்றோ? மற்று, நியூட்டன் என்னும் பேராசிரியரோ இவ்உலகியற் பொருண்மைகளை எந்நேரமும் உற்று நோக்கியபடியாகவும், உற்றுநோக்கி ஆராய்ந்தபடியாக வுமே தமது அரிய வாழ்நாளை எந்நேரமும் பயன்படுத்தி வந்தார். ஒருகால் அவர் ஓர் இலந்தை மரத்தினடியில் அமர்ந் திருக்கையில், அதில் நன்றாய்ப் பழுத்திருந்த ஒரு பழம் காம்பு கழன்று அவரது காலண்டையின் கீழ் விழுந்தது. அதனைக் கண்ட அவர், உடனே, அஃதேன் அங்ஙனம் கீழ் விழலாயிற்று என ஆராயப் புகுந்தார். அந்நிகழ்ச்சியினைப் புல்லியதென்று விலக்கிவிடாமல், அல்லும்பகலும் அவர் அதனைப் பலவாற்றான்*

ஆராய்ந்து பார்க்க, மேலுள்ள பருப்பொருள்களைக் கீழே தன்கண் இழுத்துக்கொள்ளும் ஓர் ஆற்றல் இந்நிலவுல கத்திற்கு உண்டென்னும் அரும்பேருண்மையினை அவர் கண்டு கொண்டார். இந்நிலவுலகமாகிய பருப்பொருளுக்கு உள்ள இவ் இழுக்கு மாற்றலை அவர் கண்டறிந்த பிறகுதான், வான் வெளியிற் பந்துகள் போல் சுழலா நிற்கும் ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி முதலான ஏழு உலகங்களும், அவற்றோடொத்த அளவிடப்படாத எண்ணிறந்த வான்மீன் மண்டிலங்களும் தத்தம் பருமனுக்குத் தக்க தொலைவில் நின்று ஒன்றையொன்று இழுத்தபடியாய் ஒன்றையொன்று சுற்றிச் செல்லும் வியப்பான உண்மை நிகழ்ச்சியினையும் இன்னும் இதுபோன்ற வேறு பல புதுமை களையும் கண்டு வெளியிட்டார்.

இப்பேராசிரியரது அறிவு வரலாற்றை எண்ணிப் பார்க்குங்கால் பகுத்தறிவொடு கூடாத கட்பார்வை பயன் இலதாதலை உணர்கின்றனம் அல்லமோ? மக்களெல்லாரும் கண்ணினாற் பொருள்களையும் பொருள் நிகழ்ச்சிகளையும் பார்த்துண்டாகிய ஓரளவான பகுத்தறிவு கொண்டே வாழ்க்கை செலுத்தி வருகின்றனரென்பது உண்மையே. என் றாலும், ஒருபொருள் தன்மை மற்றொன்றின் வேறாதலும், அன்றி ஒன்று மற்றொன்றை ஒத்திருத்தலும், அவ்வாறெல்லாம் அமைந்த அமைப்புகளின் கீழ் அவை தம்மை அமைத்த முதற்பேரறிவு ஒன்று மிளிரும் பான்மையும் எல்லாம் கருத்து ஒருங்கி ஆராய்ந்து பார்ப்பவர் அம்மக்களுள் எத்தனை பேர் உளர்? ஒரோவொரு காலங்களில் ஒரோவொருவரே மிக அரியராய் ஆங்காங்குக் காணப்படுகின்றனர். ஒரு கயிற்றில் கட்டித் தொங்கவிடப்பட்டிருக்கும் ஓர் எடைக்கல் அங்கும் இங்குமாய் ஊசலாடுவதை எத்தனை ஆயிரக்கணக்கான மக்கள் முன்னும் பின்னும் பார்த்திருக்க வேண்டும்! அதிலிருந்து நாழிகை அறிவிக்கும் கடிகாரக் கருவியினை அமைக்கும் நுண்ணறிவு கலிலீயோ என்னும் வான்நூலாசிரியர்க்கன்றி வேறெவர்க்கேனும் தோன்றியது உண்டா? இல்லையே!

பின்னும் ஒரு கால் அவ்வான்நூலாசிரியர் தொலைவு நோக்கி என்னும் ஒரு வியத்தகு கண்ணாடியினை அமைக்கும் முறை கண்டறிந்ததும் மிகவும் வியக்கற்பாலதாயிருக்கின்றது.

மூக்குக் கண்ணாடி செய்யும் ஒருவர், தொலைவிலுள்ள பொருள்களைக் கட்புலனுக்கு அருகே காட்டும் ஓர் அரிய கருவியினை அமைத்து அதனை ஒரு செல்வர்க்கு வழங்கிய செய்தியைக், கலிலீயோ என்னும் அப்பேரறிஞர் ஒரு நாள் தற்செயலாகக் கேள்வியுற்றார். கேட்ட அந்நாள் முதல் அவர் அங்ஙனம் தொலைவில் உள்ளவைகளை அருகில் காட்டும் கருவியின் அமைப்பைத் தொடர்பாக ஆராய்ந்து செய்து செய்து பார்த்துக் கடைசியாகத் ‘தொலைநோக்கி’ (Telescope) என்னும் புதுமையான கருவியை அமைத்து முடித்தார். அக்கருவியானது அமைக்கப்பட்ட பிறகுதான், எத்தனையோ கோடி மைல் களுக்கு அப்பால் உள்ள ஞாயிறு, திங்கள் முதலான உலகங்களின் இயல்புகளையும், அவை தமக்கும் எட்டாத் தொலைவிலுள்ள ஏனை வான்மீன் மண்டிலங்களின் இயல்பு களையும் எல்லாம் அவரும் அவர் வழி வந்த மற்றை வான் நூலாசிரியர்களும் நன்கறிந்து கண்டு நம்போல்வார்க்கெல்லாம் அவ்வுண்மைகளை நன்குவிளக்கி வருகின்றனர். கலிலீயோ என்னும் அவ்வறிஞர் பெருமானுக்கு அத்துணை விழிப்பான கருத்தும் ஓயாத ஆராய்ச்சியறிவும் ஆராய்ந்தவைகளைச் செய்து முடிக்கும் விடாமுயற்சியும் இல்லாதிருந்தால், நாம் அம்மேலுலகங்களின் உண்மைகளை உணர்ந்து கொள்ளல் இயலுமோ? அவ்வுண்மைகளை அறியாமல் அவ்வுலகங் களைப் பற்றிய வெறுங் குருட்டு நம்பிக்கைகளிலும் பொய்க் கதைகளிலுமன்றோ நம் வாழ்நாளை நாம் விலங்கினங்களைப் போல் கழிக்க வேண்டும்?

இன்னும் பாருங்கள்! கூவல் ஆமை, குரை கடல் ஆமையைப் பார்த்துப் பழித்தது போலத் தாம் இருக்கும் நாட்டையும் தம் நாட்டிலுள்ள மக்களையும் தவிர வேற்று நாடுகளையும் அந்நாடுகளில் உள்ள மக்களையும் பற்றிச் சிறிதுமே உண்மை தெரியாமல் அந்நாடுகளையும் அம் மக்களையும் இழித்துப் பேசுவோர் நம்மில் மிகச் சிலராகவே காணப்படுகின்றனர். தாமிருக்கும் ஊரில் தாம் உயிர் வாழ்வதற்கு வேண்டும் கருவிகள் கிடைக்கப் பெறாமல் வறுமைப்பட்டுத் துன்புறுவோரே அயல்நாடுகள் சென்று குடியேறக் காண்கின்றோம். இவ்வாறாக நம்மனோர் பெரும்பாலும் தாமிருக்கும் இடத்தைவிட்டுப் பெயராத

சோம்பர்களாயும், உலகத்தின் பல பகுதிகளையும் கண்டு அறிவை அகலமாக்கும் விரிந்த நோக்கம் இல்லாதவர் களாயும் இருத்தலறிந்தே நம் பண்டை ஆசிரியர்கள் இந்திய இலங்கை நாடுகள் எங்கும் கடவுளை வணங்குவதற்கென்று மாபெருங் கோயில்கள் அமைத்து, அம்முகத்தால் ஓர் ஊரவர் வேறு ஓர் ஊர்சென்று அன்பிலும், அறிவிலும் விரிந்த நோக்கத்திலும் மேன்மேற் பெருகுதற்கு, வழிசெய்து வைத்தனர். வைத்தும், கடற்கப்பால் உள்ள நாடுகளுக்குக் கப்பலேறிச் சென்று ஆங்காங்குக் குடியேறக் கருதும் மனத்திட்பம் உடையார் நம்மில் இன்னும் மிகச் சிலராகவே இருக்கின்றனர். கப்பலேறிச் சென்றால் கடலுக்கு இரையாவோம் என்னும் அச்சம் அவர்கள் உள்ளத்திற் குடிகொண்டிருக்கின்றது! அதுவேயுமன்றிக், கப்பலேறிச் செல்வாரைத் தமது சாதிக்குட் சேர்க்கலாகாது என்னும் கட்டுப்பாடும் சில வகுப்பில் கடுமையாய் இருக்கின்றது! இதனாலேயே, நிலவளம், நீர்வளம், பொருள் வளம் நிரம்பிய பெரிய நாடுகளில் சென்று குடியேறி இனிது உயிர்வாழும் பெரும்பேற்றையும் உரிமையையும் இழந்து, நம் இந்து மக்களில் பெரும்பாலார் சிறிய சிறிய வெற்றூர்களிலிருந்து மிடிப்பட்ட குறுவாழ்க்கை செலுத்து கின்றனர்!

ஆனால், மேல்நாட்டவரான வெள்ளைக்கார நன் மக்களோ தாம் பிறந்த ஊர்களில் இருக்குமளவில் மன அமைதி பெறாத பெருநோக்கமும் பேரறிவும் பெருமுயற்சியும் பேரூக்கமும் அஞ்சா ஆண்மையும் வாய்ந்தவர்களாய் இந்நிலவுலக மெங்கும் உள்ள பெருநிலப் பரப்புகளை எல்லாம் கடல் தாண்டிக் கண்டு கைக்கொண்டு அவைதம்மையெல்லாம் தமக்கு நீங்கா உரிமைகளாக்கி இன்பவாழ்க்கை செலுத்தி வருகின்றனர். இவர்கள் இவ்வாறு இந்நில உலகமெங்கும் பரவி இனிது வாழ்வதற்கு, இவர்கள் முன்னோரிற் சிலர் அறிவும் ஆராய்ச்சியும் எதனையும் உற்று நோக்கி எண்ணுதலும் அஞ்சா மன உறுதியும் விடாமுயற்சியும் வாய்ந்திருந்தமையே காரண மாகும். தாமிருக்கும் ஊரையும் அதற்கு அருகிலுள்ள வேறு சில ஊர்களையும் அன்றிச் சேய்மையிலுள்ளவைகளைச் சிறிதும் அறியாதவர்களாய் நம் இந்துமக்கள் மிடிப்பட்ட வாழ்க்கையில் இருக்க, மேல்நாட்டவரின் முன்னோர்களில் ஒருவரான

கொலம்பசு என்பவரோ தாமிருந்த ஸ்பெயின் தேயத்தை யடுத்த பெரும்புறக் கடலுக்கும் அப்பால் ஒரு பெருந்தேயம் உளதென்றறிந்து, மூவாயிரத்தைந்நூறு மைலுக்கு மேல் அதனைக் கடந்து சென்று, கி.பி. 1492-ம் ஆண்டில் அமெரிக்க தேயத்தைக் கண்டுபிடித்தார். அப்பெரும்புறக் கடலுக்கும் அப்பால் ஒரு பெருந்தேயம் உண்டென்பதைக் கண்ட அவரது ஆராய்ச்சி அறிவின் தெய்வத்தன்மையை என்னென்றுரைப் போம்! அதன் உண்மையை ஆராய்ந்து கண்ட அளவில் இராமல், தம் நாட்டு அரசற்கும் அரசிக்கும் அதனை மெய்ப் படுத்திக் காட்டி, மூன்று மரக்கலன்களும் நூற்றிருபஃது ஆட்களும் தாம் அக்கடல் கடந்து செல்லுதற்கு உதவியாகத் தம் அரசர்பாற் பெற்றுக்கொண்டு, முன் எவருமே சென் றறியாத அப்பேராழியில் வழிகண்டு சென்ற அவர்தம் அறிவாற்றலையும் அஞ்சா ஆண்மையினையும் எண்ணுந் தோறும் எம் நெஞ்சம் அளவிலடங்கா இறும்பூதும் திகைப்பும் அடைகின்றது!

இங்ஙனம் அப்பெரும்பௌவங் கடந்து சென்ற கொலம்பசுப் பெரியாரின் பேரறிவின் திறம், அவர்தாம் மேற்கொண்டு சென்ற அவ்வருஞ்செயலை எவ்வாறு பயன் பெறச் செய்ததென்பதும் நினைவுகூரற்பாற்று. பிறர்க்கு வழிதிசை தெரியாப் பெருவெள்ளக் காடான அப்பேராழியி னூடே அவர் எவ்வாறு வழிதெரிந்து சென்றார் என்பதை நினைத்தால் எவர்க்குத்தான் வியப்பெழாது! எவர்க்குத்தான் நெஞ்சம் திகில் கொளாது! இவ்வளவு தெரிந்து சென்றதே ஒரு தெய்வத்தன்மை! இதனினும் சிறந்த ஒரு தெய்வ அறிவும் இவரை அந்நடுக்கடலில் காப்பாற்றியது. இவர் ஐந்து கிழமை களாக அல்லது முப்பத்தைந்து நாட்களாக அப்பெருநீரில் அம்மூன்று கப்பலையும் கொண்டு செல்கின்றார். வழிதுறை ஒன்றும் தெரியவில்லை! நாற்புறமும் சூழ ஒரே வெள்ளக்காடு! தேடிச் செல்லும் தேயம் சிறிதும் தென்படவில்லை! அம்மூன்று மரக்கலங்களிலும் அவருக்கு உதவியாய்ச் சென்ற ஆட்க ளெல்லாரும் இனி நிலத்தைக் காண்போமா என்று ஏங்கி நம்பிக்கை இழந்தார்கள். தம்மை அப்பெருநீருக்கு இரை யாக்கவே அவர் கொணர்ந்தாரென எண்ணி, எல்லாரும் அவரைத் துன்புறுத்தத் தொடங்கிவிட்டனர்!

*அந்நேரத்தில், எல்லை சிறிதும் தெரியாத அப்பெருநீர்ப் பரப்பில், தமக்கு உதவியாய் வந்த துணைவர்களே நம்பிக்கை யற்று மனம் கலங்கித் தம்மைத் துன்புறுத்துவராயின் அப் போது எத்தகைய நெஞ்சழுத்தம் உடையாரும் தம்நெஞ்சம் தடுமாறாதிருத்தல் ஏலுமோ? ஏலாதே; ஆனாலும், கொலம்பசுப் பெரியார் அந்நேரத்திலும் உளம் சிறிதும் தடுமாறிற்றிலர்! தமது கப்பலுக்கருகே கடற்பாசிகள் மிதந்து செல்வதை அவர் உன்னிப்பாய்ப் பார்த்து, "இதோ! நாம் தேடிச் செல்லும் தேயம் அண்மையில் வந்துவிட்டது. அஞ்சாதீர்கள்!" என்று அவர்கள் எல்லார்க்கும் ஆறுதல் மொழிந்தார். அவர் மொழிந்த வண்ணமே சில நாட்களில் அமெரிக்க தேயக்கரை அம்மரக்கலங்களிற் சென்றார் எல்லார் கண்களுக்கும் புலப்படலாயிற்று! அப்பெருநீர்ப் பரவையில் ஆழாது தப்பிய அவரெல்லாம் உவகைக் கடலுள் ஆழ்ந்தனர்! அமெரிக்கக் கரையோரங்களில் உள்ள மலைப் பாறைகளில் ஒட்டி வளர்ந்த கடற்பாசி மிதந்து வருதலைக்கண்டு, அத்தேயத்தின் அருகே தாம் வந்துவிட்டதைக் கொலம்பசுப் பெரியார் அறிந்த அறிவு, அவருடன் சென்ற ஏனைமக்கட்கு இல்லாது போயிற்றே! இதனால் எத்துணைச் சிறிய, எளிய, புல்லிய பொருளையும் புறக்கணித்து விடாமல், அதனையும் அதனதன் தொடர்பையும் உற்றுநோக்கி ஆராயும் அறிவுடையாரே எல்லா வகையிலும் சிறந்தவராவர் என்றறிதல் வேண்டும்.*

"அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்." (குறள் 430)

# 27. ஓநாயும் கொக்கும்

ஓர் ஓநாயானது தன் தொண்டைக்குக் குறுக்கே மாட்டிக் கொண்ட ஒரு எலும்பை எடுத்து விடும்படி, அங்கும் இங்குமாய் மிகவும் துன்புற்று ஓடித் தான் எதிர்ப்பட்ட ஒவ்வொரு விலங்கையும் கெஞ்சிக் கேட்டது. அங்ஙனம் கெஞ்சிக் கேட்கும்போது எல்லாம் தனக்கு அவ்வுதவியைச் செய்யும் உயிர்க்குத் தான் தன்னாலான கைம்மாறு ஒன்றும் செய்வதாகக் குறிப்பித்தது. கடைசியாக ஒரு கொக்கு அதன் துன்பத்தையும், வேண்டுகோளையும் சொல்லுறுதியையும் கண்டு மனம் இரங்கித், தனது நீண்ட கழுத்தோடு கூடிய அலகை அவ் ஓநாயின் தொண்டைக்குள் துணிவாக நுழைத்து, அங்கே மாட்டிக் கொண்டிருந்த எலும்பை வெளியே இழுத்துவிட்டது. அவ்வாறு செய்த பிறகு அது தனக்கு ஓநாய் கைம்மாறாகத் தருதற்கு இசைந்ததனைத் தரும்படி அடக்க மாய்க் கேட்டது. உடனே அவ் ஓநாய் பல்லை இளித்துக் கொண்டு, "நன்றிகெட்ட உயிரே! ஓர் ஓநாயின் வாய்க்குள்ளே நுழைந்த உனது கழுத்துத் துண்டாக்கப்படாமல் நல்லபடியாய் வெளியே வந்ததே போதாதோ! இதனிலும் சிறந்த கைம்மா றொன்றும் உனக்கு வேண்டுமோ!" என்று சினத்துடன் கூறியது.

தீயவர்கட்கு உதவி செய்பவர்கள், அவ்வுதவிக்குக் கைம்மாறாக அவராற் பழிக்கப்படுவரே அன்றி வேறு எதிருதவி ஒன்றும் பெறார்.

## 28. ஒரு பருந்தும் சில புறாக்களும்

*சில புறாக்கள் நெடுநாளாக ஒரு பருந்துக்கு அஞ்சிய படியாய்க் காலங்கழித்து வந்தன. அவை தாம் உறையும் கூட்டை விட்டுத் தொலைவில் செல்லாமல் அங்கு அருகிலேயே மேய்ந்து கொண்டு விழிப்பாய் இருந்தமையால், அவை அப்பருந்தின் பிடியுள் அகப்படாமல் உயிர்தப்பி வாழ்ந்தன. அப்பருந்தோ தனது விருப்பம் நிறைவேறாமை கண்டு, அவற்றைத் தனக்கு இரையாக்கிக் கொள்ள ஒரு சூழ்ச்சி செய்து அப்புறாக்களை நோக்கி, "நீங்கள் ஏன் இவ்வாறு எந்நேரமும் கவலையிலும் கலக்கத்திலும் நாட்கழித்து வருகின்றீர்கள்? நீங்கள் என்னை உங்களுக்கு அரசனாக ஏற்படுத்திக் கொண்டால், எத்தகைய இடையூறும் உங்களுக்கு வராமல் உங்களைப் பாதுகாப்பேன்," என மொழிந்தது. அப்பருந்தின் சொற்களை நம்பிய அப்புறாக்கள், அதனைத் தமக்கு அவ்வாறே அரசனாக்கிக் கொண்டன. அங்ஙனம் அரசனான பிறகு அப்பருந்து ஒருமிக்க அவைகளை இரையாக்கிக் கொள்ளாமல், நாடோறும் ஒவ்வொரு புறாவாகப் பிடித்துத் தின்று வந்தது. நாளடைவில் எல்லாப் புறாக்களும் இங்ஙனம் அதற்கு இரையாகிப் போகக் கடைப்படியாக எஞ்சிநின்ற புறவு அதற்கு இரையாகிப் போகும் தருவாயில், "ஆ! நாங்கள் செய்த ஏற்பாட்டுக்குத் தக்கது எங்கட்குக் கிடைத்தது!" என்று சொல்லி உயிர் துறந்தது.*

ஆகவே, கொடியோன் ஒருவனைத் தாமாகவே தெரிந் தெடுத்து அவற்குப் பெருவல்லமையைத் தந்து வைப்ப வர்கள், பிறகு அவனால் துன்புறுத்தப்பட்டால், அதற்காக அவர்கள் வியப்படைதல் எதற்கு?

## 29. இரண்டு பண்டப் பைகள்

ஒவ்வோர் ஆடவனும் தனக்கு முன்னே ஒரு பையும் தனக்குப் பின்னே ஒரு பையும் தொங்கவிட்டுக் கொண்டு செல்கின்றான்; அவ்விரண்டு பைகளிலும் குற்றங்களாகிய பண்டங்களே நிறைந்திருக்கின்றன. அவ்விரண்டில் அவன் மார்பின் முன்னே தொங்கும் பையில் பிறருடைய குற்றங் களே நிரம்பியுள்ளன. அவற்குப் பின்னே அவன் முதுகில் தொங்கும் பையிலே, அவனுடைய குற்றங்களே நிறைந்திருக் கின்றன. ஆகவே, ஒவ்வொருவரும் பிறருடைய குற்றங்களை நோக்கும் கண்பார்வை உடையராயும், தம்முடைய குற்றங் களைப் பாராக் கண்ணில் குருடராயும் இருக்கின்றனர்.

## 30. குடியானவனும் பாம்பும்

மழைக்காலத்தொருநாள் ஒரு குடியானவன் தன் வீட் டுக்குத் திரும்பி வருகையில் வேலியருகே ஒரு பாம்பு குளிரால் விறைத்துக் குற்றுயிருங் கொலையுயிருமாய்க் கிடத் தலைக் கண்டான். கண்டவன் அதன்பால் இரக்கம் உடை யோனாய், அதனையெடுத்துத் தன் மார்பில் அணைத்த படியாய்த் தன் வீட்டுக்குக் கொணர்ந்து, அடுப்பருகில் வைத்து அதற்குச் சூடேற்றினான். உடம்பில் சூடேறியவுடன் அது சுறுசுறுப்பு வாய்ந்ததாகி,அக்குடிசை வீட்டிலிருந்த அவன் பிள்ளைகள் மேல் சீறிச் செல்லலாயிற்று. அதுகண்ட அக் குடியானவன் அந்நச்சுயிருக்குத் தான் இரங்கியது தப்பாதல் உணர்ந்து, உடனே ஒரு தடியால் அதனை அடித்துக் கொன்றான்.

“புல்லறி வாளர்க்குச் செய்த உபகாரம்
கல்லின்மேல் இட்ட கலம்.”

## 31. உறை நீர்க்கட்டிமேல் உடல் பருத்த மாது

*உருசியா தேயத்தின் வடபகுதிகளில் பனியின் கடுமை மிகுதியாய் உண்டு. அதனால் அந்நாட்டின் நிலமும் ஏரியு மெல்லாம் பனி நிறைந்து இறுகி இருக்கும். பனிக்கட்டி நிறைந்த நிலமும் ஏரியும் கெட்டியாய் வழுவழுப்பாக இருத்தலால், அவற்றின்மேல் அந்நாட்டு மாந்தர்கள் சறுக்கி நடக்கும் விளையாட்டு விளையாடுதல் வழக்கம். ஒருகால் உடல்பருத்த மாது ஒருத்தி ஓர் ஏரியின் தண்ணீர் உறைந்து கெட்டியாகி அதன் மேற்பரப்பு வழுவழுப்பாய் இருக்கப் பார்த்து, அதன்மேற் சறுக்கி விளையாடச் சென்றாள். அங்ஙனம் அவள் விளையாடத் தொடங்கிய சிறிது நேரத்திலெல்லாம் கால்வழுக்கி அதன்மேற் பொதீரென வீழ்ந்தாள். வீழ்ந்தவள் தன் உடலின் சுமையால் எழுந்து நிற்கமாட்டாமல், அப்பனிப்பரப்பின் மீதே துயரத்தோடு உட்கார்ந்திருந்தனள். அப்போது அவள் பக்கமாய் அங்கே சறுக்கி விளையாடிக் கொண்டு வந்த ஒருவன் அவளைக் கண்டு இறங்கி, அவள் எழுந்திருக்குமாறு தூக்கி உதவி செய்து, "அம்மே, இதுதான் முதன்முதலாக நீங்கள் சறுக்கி விளை யாடியது போலும்!" எனக் கூறினான். அதற்கு அம்மாது, "இல்லை, இது முதன்முறை அன்று; இதுதான் எனக்குக் கடைசிமுறை!" என்று மொழிந்து அவருக்கு நன்றி செலுத்திப் போனாள்.*

## 32. பன்றி எண்ணிக்கை

*இருபது பன்றிகள் வைத்து வளர்த்து வந்த ஓர் ஒட்டன் ஒருநாள் தன்கீழ் வேலைபார்க்கும் ஒருவனையழைத்துப், பன்றிக் குடிசையில் பன்றிகள் இருபதும் இருக்கின்றனவா, என்று பார்த்துவரும்படி ஏவினான். அவ்ஏவலன் அங்ஙனமே சென்று, திரும்பி முகத்திலே திகைப்புக்குறி தோன்றத் தன் தலைவனிடம் வந்தான். வந்தவனைத் தலைவன், "நல்லது, பன்றிகள் எல்லாம் தவறாமல் இருக்கின்றனவா?" என வினவினான். "ஆ! ஐயா, பத்தொன்பது பன்றிகளைப் பிசகாமல் எண்ணினேன்; ஆனால், ஓர் இளம்பன்றி மிக விரைந்து ஓடினமையால், அதனை யான் எண்ணக் கூடவில்லை" என்றான். அச்சொற் கேட்ட தலைவன் அவ் ஏவலனது மடமையைப் பார்த்து நகை புரிந்தான்.*

## 33. திறமையுள்ள நாய்

*ஒருகால் ஒரு செல்வர் தாம் வளர்க்கும் நாயைத் தமது பக்கத்தில் வைத்துக்கொண்டு தமது குதிரை வண்டியில் ஒரு கடைக்குச் சென்றார். கடையருகே சென்றதும், வண்டியை நிறுத்தி, நாயை வண்டியிலேயே இருக்கும்படி செய்துவிட்டு அவர் அக்கடையினுள்ளே நுழைந்தார். அப்போது குதிரை தெருவில் எதனையோ கண்டு மிரண்டு, வண்டியை இழுத்துக் கொண்டு நாலுகால் பாய்ச்சலில் ஓடலாயிற்று. அதன் கடிவாள வார் தெருநெடுகக் கூடவே இழுப்புண்டது. வண்டிக் குள்ளிருந்த நாயோ தன் வண்டிக்குதிரை தலைகால் தெரியாமல் ஓடுதலைக் கண்டதும் திடுமெனக் கீழே குதித்து, நிலத்தே இழுபட்டுச் செல்லும் கடிவாள வாரைத் தனது வாயினாற் கௌவிப் பிடித்துக் கொண்டது. குதிரை சிறிது வழி*

அந்நாயையும் இழுத்துச் சென்றதாயினும், நாய் தான் கௌவிய கடிவாள வாரை விடாப்பிடியாய்ப் பிடித்து இழுத் தமையால் குதிரை கடைசியாக நிற்க வேண்டுவதாயிற்று. இங்ஙனம், அந்நாய் செய்யாதிருந்தால், அக்குதிரை தான் வெருண்டோடும் ஓட்டத்தால் தான் இழுத்துச் செல்லும் வண்டியை எங்காயினும் மோதிச் சுக்கல்சுக்கலாய் உடைத் திருக்கும்; தானும் எங்காயினும் தடுமாறி விழுந்து கால் முறிந்திருக்கும். இடர்ப்பட்ட நேரத்தில் தன் நாய் செய்த இப்பேருதவியை நினைந்து நினைந்து வியந்து அதன் தலைவன் அதனைப் பெரிதும் பாராட்டினான்.

# 34. பழக்கத்தின் வலிவு

*இவ் இந்திய நாட்டின் ஒரு கடற்கரைப் பக்கத்து மேட்டுக் குப்பத்தில் உயிர்வாழும் கரையாளப்பெண்கள் சிலர் தாம் கொண்டுபோன மீன்களை ஓர் அங்காடியில் விற்பனை செய்து விட்டுத், தமது இல்லம் நோக்கி மாலைப் பொழுதில் திரும்பி வருகையில், இடியும் காற்றும் மழையும் வந்துவிட்டன. நடு வழியில் இவ்வாறு நேரவே, அவர்கள் அவ்வழியின் ஓரமாய் இருந்த ஒரு பூந்தோட்டத்தினுள் நுழைந்தார்கள். அத்தோட்டக்காரன் அப்பெண்கள் மழை யிலும் காற்றிலும் அகப்பட்டு வருந்துதல் கண்டு கொஞ்சம் இரங்கித், தனது ஓலை வீட்டினுள்ளே நறுமணம் கமழும் மலர்கள் குவிக்கப்பட்டுள்ள ஓர் அறையின் ஒரு பக்கத்தே அவர்கள் தங்கியிருக்கும்படி உதவி செய்தான். சுமைசுமந்து நடந்தமையால் அலுப்புற்ற அச்செம்படவ மாதர்கள் உறங்கு வதற்காகக் கீழே படுத்தார்கள். ஆனால் அவர்களுக்கு அருகில் குவிக்கப்பட்டிருந்த மலர்க் குவியலிலிருந்து எழுந்த மணம் அவர்களது மூக்குக்குப் பிடிக்காமையால் அவர்கள் தூங்கக் கூடவில்லை. சிறிது நேரம் வரையில் பார்த்துவிட்டுப், பிறகு அப்பெண்கள் முடைநாற்றம் நாறும் தம்முடைய மீன் கூடை களைக் கொணர்ந்து தமது மூக்கருகே வைத்துக் கொண்டு நன்றாய்க் குறட்டை விட்டுத் தூங்கலாயினர். பழக்கம் கொடிய தென்பது இதனால் நன்கு புலப்படுகின்றதன்றோ?*

## 35. அருளுடை ஊழியம்

ஏழைப் பெற்றோர்களுக்குப் பிள்ளையாய் பிறந்த பாரி என்னும் பிரஞ்சுக்கார இளைஞர், பாரிசு மாநகரத்திலுள்ள மருத்துவக்கழகத்தில் கலைபயின்று தேர்ந்தபின் ஓர் ஏனாதி மருத்துவரின் கீழ் மருத்துவ ஊழியம் செய்ய அமர்ந்தனர். அமர்ந்து சிறிது காலம் சென்ற பின், தனது நாட்டுப் படை ஞர்களுக்குப் புண் மருத்துவம் பார்க்கும் தொழிலில் அவர் அமர்த்தப்பட்டார். அக்காலத்தில், அதாவது அவர் உயிர் வாழ்ந்த பதினாறாம் நூற்றாண்டில், வெடிகுண்டுபட்ட படைஞரின் புண்களுக்குக் கொதிக்கக் கொதிக்கக் காய்ச்சிய எண்ணெயைவிட்டு, அவற்றை ஆற்றுவது வழக்கமாய் நடந்து வந்தது. முன்னமே வெடிகுண்டுகளால் துளைக்கப் பட்டு ஆற்றொணாத் துயர் உழக்கும் படைஞரின் காயங் களுக்குக் கொதிக்கக் காய்ச்சிய எண்ணெயைச் சுடச்சுடச் சொரிந்தால், அது பின்னும் அவர்கட்கு எவ்வளவு கொடிய துன்பத்தைத் தந்திருக்கும்! இத்தகைய அருள் இல்லாக் கொடிய மருத்துவத்தைத் தமது கண்ணெதிரே கண்ட பாரி என்னும் அவ்விளைஞர்க்கு நெஞ்சம் நீராய் உருகியது! இக்கொடிய முறையை அறவே ஒழித்துவிட்டுப், படைஞர்க்குத் துன்பம் பயவாமல் செய்யும் மருந்து முறை எதுவென்று ஆராய்வதில் அவரது உள்ளம் இரவும் பகலும் ஈடுபட்டது. இரக்க நெஞ்சம் வாய்ந்தாரது எண்ணம் நிறை வேறுதற்கு இறைவனே துணை நிற்பன். ஒருநாள் வழக்கம்போலப் படைஞரின் புண்களுக்கு இடும்பொருட்டு எடுத்துக் காய்ச்சிய எண்ணெய் எல்லார்க்கும் போதாமல் ஒரு சிலர்க்கே போதுமாய் இருந்தது. அதனால் மற்றைப் பலரின் காயங்கள் எண்ணெய் இடாமலே விடப் பட்டன. அங்ஙனம் எண்ணெய் இன்றி விடப்பட்டவர் களைப் பாரி மருத்துவர் அடுத்த நாட்சென்று உற்று நோக்குகையில் எண்ணெய் இடப்பட்டவர்களை விட அஃது இடப்படாதவர்

களே நல்ல நிலையில் இருக்கக் கண்டார். அது முதல் கொதிக்கும் எண்ணெயை இட்டுக் கட்டும் அக்கொடிய முறையை ஒழித்து, வேறு இனிய வகைகளால் ஆற்றும் முறைகளைக் கையாண்டு, அவர் படைஞரின் புண்களை விரைவில் இனிதாக ஆற்றியதுடன், தாம் கையாண்ட இனிய புதுமுறைகளை விளக்கியும் அவர் அரியதொரு நூல் இயற்றினார்.

இன்னும் அக்காலத்தில் கைகால் முறிந்துபோன படைஞர்க்கு, முறிந்த உறுப்புகளைத் தறித்தபின், மிச்சமாய் நிற்கும் உறுப்பின் முனைகளில் பழுக்கக் காய்ச்சிய இரும்பை வைத்து, அவற்றைத் தீய்க்கும் அறக்கொடிய மருத்துவமும் வழக்கமாய் நடந்து வந்தது! உயிரைப் பெருந்துன்பத்தில் படுப்பிக்கும் இக்கொடிய முறையைக் கேட்பினும் எம் குலை நடுங்குகின்றது! அதனை நேரிருந்து கண்ட மெல்லிய உள்ளத் தினரான பாரி மருத்துவர்க்கு அக்கொடுமை எவ்வளவு துடிதுடிப்பினைத் தந்திருக்கும்! இக்கொடிய முறையினையும் அவர் உடனே நிறுத்தித், தறிபட்டு எச்சமாய் நிற்கும் உறுப்புகளின் இரத்த நரம்புகளிலிருந்து இரத்தம் வெளியே பெருகி விழாதபடி அவைகளைப் பட்டுக்கயிறு கொண்டு கட்டி மருந்திட்டு இனிதாக விரைவில் ஆற்றினார்.

இன்னும் ஒரு கால் ஒரு மறவர் தமது உடம்பிற் பத்து இடங்களில் கத்தி வெட்டுப் பட்டு உணர்விழந்து கிடந்தார். அவரைக் கண்ட பிறர் அவர் இறந்து போனாரெனவே கருதி, அவரைப் புதைத்து விடுவதற்கு வேண்டும் ஏற்பாடுக ளெல்லாம் செய்யலாயினர். ஆனால், அம்மறவரைச் சென்று உற்றுநோக்கிய பாரி மருத்துவரோ, அவர்க்கு உயிர் போக வில்லை என உறுதிமொழி புகன்று, சிறிது நேரத்தில் எல்லாம் அவரை உயிர்ப்பித்து, அவருடைய வெட்டுக் காயங்களையும் சில நாட்களில் ஆற்றினார்.

இங்ஙனம் எல்லாம் பாரி மருத்துவர் தமக்குச் செய்து வந்த அருள் மருத்துவ முறைகளுக்காக நன்றி செலுத்த விழைந்த அப்படைஞர்கள் தாந் தாமும் மனம் உவந்து கொடுத்த பொருளைத் திரட்டித், திரட்டிய பெரும் பொருளை அவர்க்குக் காணிக்கையாகச் செலுத்தினர்.

## 36. கோட்டையைக் காத்த கோதை

*கனடா நாட்டின் பிரஞ்சுக்காரர்க்கு உரிய 'வேர்ச்சேரி' என்னும் கோட்டையை 1690-ஆம் ஆண்டில் 'இருக்கோய' வகுப்பினர் சிலர் வந்து தாக்கலாயினர். தாக்கவந்த அவர்கள் ஏதோர் அரவமும் செய்யாமல் மதின்மேல் ஏறி எளிதிலே உட்குதித்து விடுதற்கு ஏற்பாடு செய்துகொண்டு, அதன் படியே மதில்மேல் ஏறினர். ஏறியதும், உள்ளிருந்து போந்த துப்பாக்கிக் குண்டுகளைக் கண்டு, அவர்கள் வியப்புற்று, மதிலைக் கடக்கமாட்டாதவர்களாய்ப் பின்னடைந்தனர். திரும்பவும் அவர்கள் அம்மதின்மேற் செல்லத், திரும்பவும் போந்த துப்பாக்கிக் குண்டுகளின் முன் நிற்கமாட்டாத வர்களாய்த், திரும்பவும் பின்முதுகு காட்டினர். அக்கோட்டை யின் அகத்தே எவ்விடத்துங் காணப்பட்ட மாது ஒருத்தியைத் தவிர வேறு படைஞர் ஒருவரும் அதனுட் காணப்படா மையும், அங்ஙனமிருந்தும் பலமுகமாகத் துப்பாக்கிக் குண்டு கள் வந்து வீழ்ந்தமையும் நினைந்து அவர்கள் பெரிதும் இறும்பூதுற்றனர். பெண்பாலரைத் தவிர வேறு எவராலும் அக்கோட்டை காக்கப்படவில்லை என்னும் செய்தியே, அவ் இருக்கோய வகுப்பினர் அடுத்தடுத்துப் படைமேற் கொண்டு வந்து அக்கோட்டையைத் தாக்கும்படி செய்தது. தாக்கியும் என்! தாக்கிய ஒவ்வொரு முறையும் அவர் தோல்வியடைந்தனரே அன்றிச் சிறிதும் வெற்றி பெற்றிலர். கடைசியாக அவர்கள் இரண்டு நாள் வரையில் அக்கோட்டையை முற்றுகையிட்டும், அதனைப் பிடித்துக் கொள்ள மாட்டாதவர்களாய்ப் பின் வாங்கியே போயினர். இவ்வாறு மறித்து மறித்தும் வந்து அக்கோட்டையைத் தாக்கிய அவர்களை உட்புகவிடாமல் உள்நின்று எதிர்த்து முதுகுகாட்டி ஓடச் செய்தவள் கோதை ஒருத்தியே ஆவாள். இந்த அம்மை, ஒரு முழுப்படையின் துணை கொண்டவள் போல் அஞ்சா ஆண்மையுடனும்*

மனத்திட்பத்துடனும் தான் ஒருத்தியே அக்கோட்டையின் பல விடங்களிலும் தோன்றித்தோன்றி நின்று பகைவரை மிகவும் அச்சுறுத்தினள்.

மறுபடியும் இரண்டாண்டுகள் கழித்து அவ் இருக் கோய மக்கள் அக்கோட்டையைத் தகர்க்க வந்தபோது, அக்கோட்டைத் தலைவரின் மகளான பதினான்கு ஆண் டுடைய சிறுமி ஒருத்தியே, அவர்கள் உள்நுழைய ஓர் அடி எடுத்து வைக்கும் நேரத்திற்குள் ஓடிச் சென்று அதன் வாயிற் கதவைச் சாத்திச் செவ்வையாக அடைத்து வைத்தவள் ஆவாள். இந்தச் சிறுமியும் ஒரு மறவரும் அல்லாமல் பிறர் எவரும் அதனை அப்போது காத்தற்கு அங்கிலர். அங்ஙனமிருந்தும், அச்சிறுமி வேளைக்கு வேளை தன் உடையை மாற்றி, அக் கோட்டையினுள் பல முகத்தும் சுற்றிச் சுற்றிச் சென்று, பகைவர்கள் மேல் துப்பாக்கிக் குண்டுகளை நேரமும் குறியும் தவறாமல் ஏவி வந்தமையால், உள்ளே ஒரு பெரும்படை யிருந்து தம்மை எதிர்ப்பதாகவே கருதி, அப்பகைவர்கள் நெஞ்சம் தளர்ந்து வெற்றி பெறாமல் மறித்துத் திரும்பிப் போயினர். இங்ஙனமாக அச்சிறுமி செய்த செயற்கருஞ் செயலன்றோ, அவ்அரணத்தைக் காப்பாற்றியது!

## 37. மறைபொருட் காட்சி

*1725-ஆம் ஆண்டில் போர்த்துக்கேசிய மாது ஒருத்தியைப் பற்றிய செய்தியானது, இயற்கைப் பொருள் அறிஞர்க்குப் பெருந்திகைப்பையும் பெருங்குழப்பத்தையும் உண்டு பண்ணியது. அம்மாதுக்கு மறைந்துள்ள பொருள்களைக் கண்டறிந்து உரைக்கும் ஆற்றல் நிரம்ப உள்ளதென்னும் செய்தி எங்கும் பரவியது. அந்த அம்மை வேறோர் உதவியும் நாடாது தன் கண்களால் நிலத்தை உற்றுநோக்கிய அளவில், அந் நிலத்தின் கீழ் உள்ள மண்ணடுக்குகளையும், அவை ஒன்றுக் கொன்று எவ்வளவு தொலைவில் உள்ளன என்பதையும் சிறிதும் பிழைபடாமற் சொல்லிவிடுவள். அது மட்டுமே அன்றி, அவள் ஒருவரது உடம்பை உற்றுப் பார்ப்பாளாயின், அவ் வுடம்புக்குள் ஓடும் இரத்தத்தையும், இரத்த நரம்புகளையும், எலும்புகளையும், உள்ளே அங்கங்கு நோய்ப்பட்டிருக்கும் இடங்களையும் தெளிவாய்க் கண்டு, அவைகளைப் பிறர்க்கு நன்கெடுத்துரைப்பள். கருக்கொண்டிருக்கும் மங்கையர் அவள்பால் சென்று, தமக்குப் பிறக்கும் பிள்ளை ஆணோ பெண்ணோ என்பதைத் திட்டமாய்த் தெரிந்துகொள்வர்; பிறந்த பிள்ளையும், அவள் முன் அறிந்து சொன்னபடியேதான் இருக்கும்.*

*அஞ்ஞான்றிருந்த போர்த்துக்கல் தேய அரசர் தாம் புதிதாகக் கட்டுவித்த அரண்மனைக்கு வேண்டிய அளவு நல்ல தண்ணீர் பெறுதற்பொருட்டுப் பல இடங்களை அகழ்ந்து பார்த்தும் தண்ணீர் கிடைத்திலது. அதனால் அவர் உள்ளங் கலங்கி வருந்துகையில், அறிந்தார் சிலர் சொல்லக் கேட்டு, மேற்குறிப்பிட்ட மாதைத் தம்பால் வருவித்துத், தமதரண் மனைக்கு வேண்டுமான செழும் புனல் இருக்கும் இடத்தைக் குறிப்பிடுக என வேண்ட, அவளும் மிகுந்த தீம்புனல் ஊறும் ஒரு நீர்ஊற்று நிலத்தின் கீழ் இருக்கும் ஓரிடத்தைச் சுட்டிக்*

காட்டினாள். அவ்விடத்தை உடனே அவ்வரசர் அகழ்விக்க, மிகுதியான இனியநீர் கீழிருந்து சுரந்து மேலே பெருகியது. அதுகண்ட அரசர் பெருங்களிப்புற்று அவ்வம்மைக்குப் பெருஞ்சிறப்புகள் செய்து சமயப் பட்டம் அளித்து உதவிச் சம்பளமும் வழங்கினார்.

அவளது வியத்தகும் ஆற்றலை நேரே கண்டறிந்த அஞ்ஞான்றை இயற்கைப் பொருள் நூலார் பெரிதும் திகைத்து, அவ்வாற்றலின் உண்மையைத் தெரிதல் வேண்டி, முன்னுள்ளோர் நூல்களை எல்லாம் ஆராயத் துவங்கினர். ஆராய்ந்து கடைசியாக இயற்கைப் பொருள் ஆராய்ச்சியில் பல பெரு நுட்பங்களைக் கண்டறிந்து உலகத்திற்குப் பேருதவி செய்தவராகிய ஊசினர் (Huygens) என்பார் எழுதி வைத்திருந்த ஒரு கடிதத்தைத் தெரிந்தெடுத்தனர். போரிலிருந்து சிறையாகப் பிடித்துக் கொணர்ந்து அந்துவர்ப்பு (Antwerp) நகரின் சிறைக் கூடத்தில் அடைக்கப்பட்டிருந்த ஒருவர், எவ்வளவு தடிப்பான மட்டிப் பொருள்களையும் உற்றுநோக்கி, அவை செந்நிறம் வாய்ந்திலவாயின், அவற்றால் மறைக்கப்பட்ட பண்டங் களைத் தெளிவாகக் கண்டறிந்துரைக்கும் அறிவாற்றல் உடையராயிருந்தனர் என்னும் வியக்கத்தக்க வரலாறு அக்கலைஞர் வரைந்த அக்கடிதத்திற் குறிக்கப்பட்டிருந்தது. அதனைத் தெரிந்த பிறகுதான் அவ்வியற் பொருளறிஞர் உள்ளம் அமைதியுற்றது.

மேற்சொன்ன போர்த்துகேசிய மாது தமக்குள்ள அவ்வறி வாற்றலைப் பயன்படுத்த நேரும் காலங்களில் எல்லாம் ஏதோர் உணவும் உட்கொள்ளாமல் கடும் பட்டினி கிடப்பர்; ஏனென்றால் தமது வயிற்றில் செரியாக்குணம் சிறிதிருப் பினும் தமக்குள்ள அவ்வியத்தகும் ஆற்றல் மங்கிப் போதலை அவர் நன்குணர்ந்து இருந்தனர்.

எனவே, நுண்ணறிவை வளர்க்க வேண்டும் சிறார்கள் கண்ட கண்ட உணவுப் பண்டங்களை எல்லாம் வேளையும் நேரமும் அறியாமல் உட்கொள்வது எவ்வளவு பிசகானது என்பது இனிது புலப்படுகின்றதன்றோ? ஆதலால், சிறாரும் அவர்தம் பெற்றோரும் உணவுப் பண்டங்களை மிகுதியாக அருந்தாமல் விழிப்பாய் இருத்தலுடன், இடையிடையே பட்டினி கிடக்கவும் பழகுதலைக் கடைப்பிடித்தல் வேண்டு மென்று உணர்ந்து கொள்க.

## 38. மதிப்பரிய மணிக்கலன்

'அவன்சுவர்க்கர்' (Abensberg) என்னும் தேயத்துச் செல்வர் ஒருவர் முப்பத்திரண்டு பிள்ளைகளைப் பெற்றெடுத்து அவர்கள் எல்லாரையும் மிக அருமையாக வளர்த்து வந்தனர். ஒருகால் செர்மன் தேய அரசன் தம்முடைய நாடு நகரங்களைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வருகையில், ஆங்காங்குள்ள சிற்றரசர்களும் அரசியல் தொழிலில் அமர்ந்திருப்பவர்களும் செல்வர்களும் பிறரும் மணிகள் பதித்த பொன்னணிகள் பொற்கலன்கள் பொற்பட்டாடைகள் முதலான விலையுயர்ந்த பொருள்களைத் தத்தம் காணிக்கைகளாக் கொணர்ந்து வைத்து அரசனை வணங்கி வாழ்த்தினர். ஆனால், அவன்சுவர்க்கரோ அரசன் தம் ஊர்க்கு அணித்தாக வருகையில், தாம் பெற்ற முப்பத்திரண்டு பிள்ளைகளையும் அழைத்துக் கொண்டு சென்று, அரசனை வரவேற்று, அரசர்க்கும், தமது நாட்டிற்கும் தாம் செலுத்துதற்குத் தக்க காணிக்கைகள் தம் முப்பத்திரண்டு பிள்ளைகளாகிய மதிப்பரிய மணிக்கலன்களே என மொழிந்து, அப்பிள்ளைகள் எல்லாருடனும் அரசனை வணங்கி வாழ்த்தினர். அதுகண்ட அரசன் அவரது உள்ளத்தின் உண்மையையும் அவர் செலுத்திய காணிக்கைகளின் மதிப்பரிய தன்மையையும் நன்குணர்ந்து வியந்து, அவர்க்கும் அவர் தம் புதல்வர், புதல்வியர்க்கும் பல் பெருஞ்சிறப்புகள் செய்து மகிழ்ந்தான்.

இங்ஙனமே நிகழ்ந்த மற்றொன்று வருமாறு: 'கருநீலியாள்' (Cornelia) என்னும் ஒரு பெருமாட்டியாரைக் காண வந்த மற்றொரு பெருமாட்டி தனக்குள்ள செல்வப் பெருக்கையும் தான் அணிந்திருந்த நகைகளின் விலையுயர்ந்த தன்மையையும் தானாகவே புகழ்ந்து பேசி முடித்த பின்னர்,

கருநீலியாளை நோக்கி, "அம்மே, உங்களுக்கு எவ்வளவு செல்வம் உளது? உங்களுக்கு எத்தனை விலையுயர்ந்த நகைகள் உள்ளன?" என்று வினவினாள். அது கேட்ட கருநீலியாள் தமது இல்லத்தின் பின்கட்டினுள்ளே சென்று தம் பிள்ளைகள் இருவரையும் கொண்டுவந்து அந்த அம்மைக்குக் காட்டி, "இவர்கள் இருவருமே எனக்கு இரு பெருஞ் செல்வத்திரள்கள்! இவ்விருவருமே எனக்கு மதிப்பரிய மணிக்கலன்கள்!" என மொழிந்தனள். இச்சொற்கேட்ட அந்த அம்மை தனது செல்வத்தின் போலித் தன்மையையும் கருநீலியாளுக்குள்ள செல்வத்தின் உண்மையையும் உணர்ந்து வெட்கிச் செருக்கழிந்து தனது பிழையைப் பொறுக்கும்படி கருநீலியாளை வேண்டினள்.

# 39. ஓர் அரசியல் தலைவரின் அரிய இயற்கை

*மிகவும் ஏழ்மையான நிலைமையிலிருந்து தையல் வேலை செய்து பிழைத்து வந்தவரான 'அந்துரு சான்சன்'* (Andrew Johnson) *என்னும் ஆண்மகனார் தமது அறிவாற்றலாலும் தமது நல்லியற்கையின் விழுப்பத்தாலும் படிப்படியே தமது வாழ்க்கை நிலை உயரப் பெற்று கடைசியாக வட அமெரிக்காவின் கண்ணதான இணைக்கப்பட்ட நாட்டரசுக்குத் தலைவராம் சாலப் பெரிய நிலையை அடைந்தனர். ஒருகால் ஓர் ஊரின்கண் ஒரு பெருங்கூட்டத்தின் இடையே அவர் ஒரு பேருரை நிகழ்த்துங்கால், தாம் அரசியல் துறைகளில் எவ்வெவ்வாறு ஊழியம் செய்து எவ்வெவ்வகையில் மேலுயர்ந்து வந்தனரோ அவ்வரலாறுகளையெல்லாம் முறையே சொல்லிக் கொண்டு வந்தனர். அப்போது அக்கூட்டத்திலிருந்து ஒரு குறும்பன் "தையற் காரனாயிருந்து மேல் வந்தோ!" எனக் கூவினான். அதுகேட்ட அத்தலைவர் அவ்விகழுரைக்குச் சிறிதும் வருந்தாராய், அதனைச் சிறந்த பொருள் உடையதாகத் திருப்புவான் புகுந்து "எவரோ ஒரு துரைமகனார் யான் தையற்காரனாயிருந்ததைக் குறிப்பிடு கின்றார். அவரது சொல் என்னைச் சிறிதும் வருத்தாது; ஏனென்றால், யான் தையற்காரனாயிருந்த ஞான்று அத் தொழிலில் மிக்க திறமையுடையேன் என்று புகழ் படைத் துள்ளேன்; யான் தைத்துக் கொடுத்த உடுப்புகள் திருத்தமாய்ப் பொருத்தமாய் நறுவியவாய் இருந்தன; எனக்குத் தையல்வேலை கொடுத்தவர்கட்கெல்லாம் யான் சொன்ன சொற்படியே செய்து குறிப்பிட்ட நாளில் தவறாமல் கொடுத்து வந்தேன்" என எடுத்துரைத்தனர். இவரது பொறுமையுரையைக் கேட்டு அதன் அருமையை உணர்ந்த அப்பெரும் கூட்டத்தவர் எல்லாரும் அவரை மேலும் மிகுதியாய் கொண்டாடினரேயன்றி, அவரை அது பற்றிச் சிறிதும் குறைவாக நினைத்திலர்.*

# 40. உழைப்பினால் உயர்ந்த ஒரு கதை நூலாசிரியர்

*உழைப்பினாலும் விடாமுயற்சியினாலும் மிகச் சிறந்த நிலையை அடைந்தார் சிலரில் ‘திசிரேலியர்’* (Disraeli) *என்பவரின் வரலாறு மிகவும் வியக்கத்தக்கது. இவர் தமது இளமைக்காலந்தொட்டே கல்விகற்பதிலும் தாம் கற்றறிந்தவைகளை நூல்களாக எழுதி வெளியிடுவதிலும் கருத்து அழுந்தி நின்றனர். இவர் முதன்முதல் எழுதி வெளிப்படுத்திய கதைநூல் ஒன்றைப் பார்த்தாரிற் பலர் இவரை ஏளனஞ் செய்து நகையாடியதுமன்றி, இவரை வெறிபிடித்தவர் எனவும் ஏசிப் பேசினர். ஆயினும், அவர்களின் இகழுரை ஏச்சுரைகளைக் கேட்டு இவர் சிறிதும் மனங்கலங்காதவராய்த், தாம் மேற்கொண்ட நூல் இயற்றும் முயற்சியை விடாப்பிடியாய்ச் செய்தே வந்தனர். கடைசியாக இவர் இயற்றி வெளியிட்ட ‘கானிங்குசுபி’* (Coningsbuy), *‘சிபில்’* (Sybil), *‘தான்கிரேடு’* (Tancred) *என்னும் கதை நூல்கள் மூன்றும் முதிர்ந்த கதைச் சுவையானும் சொற்சுவையானும் பயில்வார் உள்ளத்தைக் கவர்ந்து அவரைப் பெரிதும் இன்புறுத்தி ஆக்கியோனுக்கும் அழியாப் பெரும்புகழை நிலைபெறுத்தலாயின.*

*பின்னர், இவர் இலண்டன் மாநகரில் குடிமக்கள் மன்றத்தில் விரிவுரை நிகழ்த்துதற்கு முதன்முதல் தோன்றி நின்றபோது, அங்கிருந்தவரில் பெரும்பாலோர் இவரைக் கண்டு நகையாடிக் கூவிப் பேரிரைச்சல் இட்டதுமன்றி, இவர் பேசிய விரிவுரையின் ஒவ்வோர் அழகிய சொற்றொடரையும் பகடி செய்து கொண்டும் இருந்தனர். ஆனால், இவரோ அத்துணை இழிவுகளையும் மனவமைதியோடு பொறுத்துக் கொண்டு முடிவில் “யான் பலவற்றைப் பலகால் துவங்கியிருக்கின்றேன்; இறுதியில் அவைகளை நன்கு முடித்து நன்மை அடைந்திருக்கின்றேன். இப்பொழுது என் பேச்சை நிறுத்தி அமர்ந்து*

விடுகிறேன்; ஆனால், நீங்கள் எனது விரிவுரையை ஆவலோடு கேட்கும் காலம் வரும்” எனக் கூறித் தமது இருக்கையில் அமர்ந்தனர்.

இவர் கூறியவண்ணமே அக்காலமும் வந்தது. உலகத்தில் மிகச் சிறந்த அறிஞர்கள் ஒருகால் ஒருங்கு குழுமியிருந்த போது அம்மன்றத்தில் இவர் நிகழ்த்திய அரும்பெருஞ் சொற்பொழிவானது அவரெல்லாருள்ளத்தையும் ஒருமிக்கக் கவர்ந்து விட்டது. எல்லாரும் இவருடைய சொல்லாற்றல் பொருளாற்றலை மிக வியந்து பேசிப் புகழ்ந்தனர். அதிலிருந்து இவரது புகழ் நாளுக்குநாள் ஓங்கி வளர்ந்து ஒளிர்வதாயிற்று. பின்னர் இவர் பாராளுமன்றத்தில் சிறந்த ஒரு விரிவுரையாளராய் எல்லாராலும் மேலும்மேலும் கொண்டாடப்பட்டுத் திகழ்ந்தனர்.

இத்துணை மேலான நிலையைத் திசிரேலியர் எய்துதற்கு ஏதுவாய் நின்றவை யாவை? இவர்தம் முயற்சியும் மனத்திட்பமும் அல்லவோ? இளைஞரில் பெரும்பாலார் தாம் துவங்கிய ஒரு நன்முயற்சியில் ஒருகால் தவறிவிட்டனராயின் அதனால் மனம் உடைந்து ஒரு மூலையில் போயிருந்து வருந்தி அவிந்து போகின்றனர். மற்றுத் திசிரேலியரோ அத்தகைய இளை ஞரைப்போல் ஒருகாலும் மனம் மடிந்து இருந்தவர் அல்லர். தாம் எடுத்த முயற்சியில் தாம் தவறியது எதனால் என்று ஆராய்ந்து அதற்குக் காரணம் இன்னது என்று கண்டதும், அதனைக் களைந்து தம்மைச் சீர்திருத்திக் கொண்டு வந்ததுடன், தமது சொற்பொழிவைக் கேட்பாரின் அகநிலை புறநிலை களையும் நன்காராய்ந்து தம்மைச் சீர்திருத்திக் கொண்டு வந்ததுடன், அந்நிலைகளுக்குத்தகத் தம்மையும் இசைவித்துக் கொண்டு வந்தனர். ஒரு நோய் கொண்டவர் அந்நோயின் மூலத்தை நன்காராய்ந்து பார்த்து அதனைக் களைந்தால் அல்லாமல், எவ்வளவுதான் மருந்துகளை உட்கொண்டு வந்தா ராயினும் அந்நோய் நீங்குமோ? அதுபோலவே, ஓர் அரும்பெரு முயற்சியை மேற்கொண்டவர் அதில் தாம் நன்மையடையாமல் பிழைபடுதற்குரிய காரணத்தைத் தெரிந்து அதனை விலக்கி னாலன்றி, அவர் அதனைக் கடைபோக முடித்துப் பயன் பெறார். இந்நுட்பத்தை நன்குணர்ந்து அதற்கேற்ப ஒழுகி னமையே திசிரேலியரின் உயர்நிலைக்கு உறுபெருங் கருவியா யிருந்தது. இதனை இளைஞர்கள் தமதுள்ளத்தில் பதித்து நடத்தல் வேண்டும்.

